# தமிழ்த் தொகை





ரெ. முத்துக்கணேசன்

Thiagu

# தமிழ்த் தொகை

தொகுத்துரையாசிரியன்:

ரெ. முத்துக்கணேசன்.

விற்பனை உரிமை;

அழகுப் பதிப்பகம்

காரைக்குடி

# முன்னுரை

(முதற்பதிப்பு)

இவ்வுலகில் பிறந்த மனிதன் வளர்ச்சியடைகிருன். அவனுக்குத் தக்கவாறு இயற்கை உதவுகிறது. வாழ்க்கையில் இன்பதுன்ப உணர்ச்சிகள் மோதுகின்றன. அதில் ஈடுபட்ட மனிதன் படிப்படியாக ஒருவகை மாறுதலை அடைகிருன். வளர்ந்து நாகரிக வளர்ச்சியைப்பெறுகிருன். ஆக மனிதனுடைய வளர்ச்சிக்கு உறுதுணையாயிருப்பன நிகழ்ச்சியோடு பின்னி நிற்கும் உணர்ச்சிகளே என்பதை நாம் அறிகின்ருேம். இந்த நிகழ்ச்சிகளும், அவற்ருேடு பின்னி நிற்கும் உணர்ச்சிகளும் நிறைந்த கவிதைகள் அவனை மேலும் பண்பாடுடையவனுக ஆக்குகின்றன.

உண்மைதானே! புலவர்கள் வாழ்ந்தார்கள். புரவலர்களும் வாழ்ந்தார்கள். புரவலர் தம் வாழ்வில் பலப்பல உண்மைகளைக் கண்டார்கள் புலவர்கள். அவையனைத்தும் அவர்தம் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. எந்தெந்த உண்மைகள் புரவலர்தம் வாழ்வில் எவ்வெப்பொழுது நிகழ்ந்தனவோ அந்தந்த உண்மைகள் அவ்வப்பொழுதே புலவர்தம் உள்ளங்களை உணர்ச்சியால் நிறைவித்தன. உடனே அவை உணர்ச்சி நிறைந்த கவிதை வடிவில் புலவர்தம் உள்ளத்தே தனித்தனிப் பாடல்களாக மலர்ந்தன. அப்படி மலர்ந்தவை நம் தமிழ்நாட்டில் எத்தனை எத்தனையோ! சிதறிக்கிடக்கும் முத்துக்கள்போல் ஆங்காங்கே புரவலர் போற்றப் புலவர்கள் வாழ்ந்தார்கள். அவர்கள் வாழ்ந்த இடமெல்லாம் கவிதை முத்துக்கள் உதிர்ந்தன. அப்படி உதிர்ந்தவற்றில் மறைந்தன பலப்பல. கிடைத்தன சில. கிடைத்தவற்றைப் பிற்காலத்தே வாழ்ந்த மக்கள் ஒன்று திரட்டிக் கோவையாக்கினர். இப்படிக் கோவையாகத்

திரட்டப்பட்ட கவிதைகள் காலத்தால் விழுங்கப் படாதவை; புலவர் தம் கருத்தால் கவரப்பட்டவை. அங்ஙனம் கவரப்பட்ட கவிதைகள் தொகுப்பு நூல் களாயின. அத்தகைய தொகுப்பு நூல்களினின்றும், மற்றும் இலக்கண இலக்கிய நூல்களில் மேற்கோள் களாகக் காட்டிய தனிப் பாக்களினின்றும், அக் காலத்தில் அழியாது பொறிக்கப்பட்ட கல்வெட்டுக் களினின்றும், இக்காலத்துத் தனிக் கவிதைகளி னின்றும், தேர்ந்த பாடல்களை ஒரு சேரத்தொகுத்த தொகை நூலே இத்தமிழ்த் தொகையாகும்.

### தமிழ்த்தொகை

இத் தமிழ்த் தொகைநூல் என்பது பாடல்களைக் கொண்டது. இப்பாடல்கள் தனிப்பாடல் திரட்டு (கா. சு. பிள்ளை பதிப்பு) — பெருந்தொகை — தொல் காப்பியம்: பொருளதிகாரம் பேராசிரியம்; நச்சினர்க் கினியம் - யாப்பருங்கலவிருத்தி-யாப்பருங்கலக்காரிகை தண்டியலங்காரம் - விரசோழியம் - தமிழ் நாவலர் சரிதம்- தனிச்செய்யுட் சிந்தாமணி-பிற்காலச்சோழர் சரித்திரம் (திரு. டி. வி. சதாசிவப்பண்டாரத்தார்) பாண்டியர் வரலாறு (திரு. டி. வி. சதாசிவப்பண்டா ரத்தார்) கல்வெட்டுப்பாடல்கள் (திரு. சா. கணேசன் அவர்கள் தந்தன) - திருப்பாடல் திரட்டு - பெரும் பாணுற்றுப்படை (தனி வெண்பா) முதலிய நூல்களி னின்றும், வித்துவான் திரு. க. தேசிகன் அவர் களுடைய பாடல்களினின்றும், என்னுடைய பாடல் களினின்றும் எடுத்துத் தொகுக்கப்பட்டிருக்கின்றன. இவற்றுள் உள்ள பாடவேற்றுமைகளில் நல்ல பாடத்தைமட்டும் எடுத்துக்கொண்டு இங்குத் தொகுக்கப்பட்டிருக்கிறது. பாடல்கள் அகம் என்றும் புறம் என்றும் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அகப் பாடல்கள் கதைக்கோப்பு அமையுமாறு அமைக்கப் பட்டிருக்கின்றன. புறப்பாடல்கள் வீரம் - கொடை பிறவகை எனப் பிரித்து அமைக்கப்பட்டிருத்தல்

காண்க. பாடல்களுக்குரிய தலைப்புக்கள் பாடலுக்கும் அதன் கருத்துக்கும் ஏற்றவண்ணம் கொடுக்கப் பட்டுள்ளன.

அகம்

வாழ்க்கை நிகழ்ச்சிகளின் நுட்பங்களைத் தொடர்ந்தே கவிதைகள் எழுகின்றன என்பர். தலைவன் பால் காதல்கொண்ட தலைவியர் தம் உள்ளத்தில் எழும் நுட்ப உணர்ச்சிகளை நன்கு எடுத்துக்காட்டு கின்றன அகப்பாடல்கள். இந்நூலின் அகப்பகுதியில் காதலியின் காதல் உள்ளம் கனவிலும் நனவிலும் காதலனையே நினைந்து ஏங்கும் நிலையினையும், இரவுப் பொழுதானது நீண்டு செல்வது போலவும் ஒளி நல்கும் கதிரவனே செத்தொழிந்தது போலவும் எண்ணி மயங்கும் காதலியின் உள்ளத்தினையும், தந்தையும் மகனும் ஆகிய திருமாலும் காமனும் முறையே வினை ஏற்றத்திலும் நிற ஏற்றத்திலும் சோழ னுக்கு நிகராகார் என எண்ணும் காதலியின் பெருமித உணர்வினையும், ஊரார் அலருக்கு அஞ்சித் தம் காதல் நிலைக்கக் காதலன் தன் கால்வண்ணம் கண்டு கைதொழும் தலைவியின் நிலைக்கு இரங்கும் தோழியின் நிலையினையும், காக்கவேண்டிய மன்னனே காவாது என் மகளைக் காதல் நோய்க்கு ஆளாக்கிவிட்டனனே என ஏங்கும் செவிலியின் உள்ளத்தினையும் களவில் முதன் முதல் கைப்பற்றிய சோழனே முறைப்படி தன் கணவன் என வாதிடும் காதலியின் அறிவுள்ளத் தினையும், காதலி தன் கண்களுக்கு வத்தவர் நாட்டு மன்னனின் அடையா நெடுங் கதவினை உவமை கூறுவதன் மூலம் காதலியின் நெஞ்சத் துடிப்பினையும் படம் பிடித்துக்காட்டும் கவிஞர்தம் கற்பனை எண்ணி எண்ணி மகிழத்தக்கது. அகப்பாடல் முழுதும் இது போன்ற கற்பனை நயம் கொழிக்கும் அழகுப் பாடல் களாகவே காட்சியளிக்கும். இத்தொகை நூலில் காணும் அகப்பாடல்கள் முத்தொள்ளாயிரத்தை நினை

ஊட்டுவனவாய்-அதன் அடியொற்றியே எழுந்தவை என்பதை ஒவ்வொரு பாட்டின் கற்பனை உணர்விலும் நாம் காணலாம்.

'கண்டன கண்க ளிருப்பப் பெரும்பணைத்தோள்
கொண்டன மன்னோ பசப்பு'-(பா-6) என்ற அடிகள்
'கண்டன உன்கண் கலந்தன நல்நெஞ்சம்
தண்டப் படுவ தடமென்தோள்' (பா-33) என்ற

முத்தொள்ளாயிர அடிகளை நினைந்தும்,

'காலேக வண்ணனைக் கண்ணுறக் காணவெம்
சாலேகம் சார நட'-(பா-12) என்ற அடிகள்
'சேலேக வண்ணனொடு சேரி புகுதலுமெஞ்
சாலேகம் சார நட' (-பா-72)என்றமுத்தொள்ளாயிர

அடிகளைப் பின்பற்றியும் எழுந்தமை காண்க. பல்கால் முத்தொள்ளாயிரத்தைப் பாடிப்பாடி அனுபவித்த கவிஞர்கள் தங்கள் தங்கள் உள்ளங்கவர்ந்த அடிகளையும் கருத்துக்களையும் தத்தம் கவிதைகளில் வைத்துப் போற்றியுள்ளார்கள். ஆகவே அகப்பகுதியில் காணப்படும் தனிப்பாடல்களின் ஆசிரியர்கள்தம் உள்ளத்தில் முத்தொள்ளாயிரம் கொலுவிற்றிருக்கக் காணுகின்றோம்!

**புறம்**

இத்தொகை நூலின் புறப்பாடல்கள் மன்னர்களின் வீரத்தைக் குறிக்கும் பகுதியாகவும், மன்னர்-புரவலர் முதலியவர்களின் கொடைத் தன்மையைக் குறிக்கும் பகுதியாகவும், தெய்வம்-குழந்தை-இயற்கைக் காட்சிகள் முதலியவற்றைப் பற்றிய பிறவகைப் பகுதியாகவும் அமைக்கப்பெற்றிருக்கின்றன. வீரப்பகுதியில் மன்னர்கள் பிறந்த நாள் விழா, அவர்தம் வீரம், யானைமறம், வாள்மறம், குதிரைமறம், கொடிச்சிறப்பு. நடுகல் வாழ்த்து முதலியன இடம்பெற்றுள்ளன.

கொடைப்பகுதியில் புறுவுக்காகத் தன்னையே ஈந்த வள்ளல் சோழனின் பண்பும் வரையாது ஈட்டலும் வரையாது கொடுத்தலும் நிகழ்தலின் சோழனின் செல்வம் அளவிடற்கரியதாயிருக்கிறது என்பதனால் அவன் தன் செல்வச் செழிப்பும், வாண னிடம் பரிசில் பெறச் சென்ற புலவனுக்கு மன்னவன் யானையை நல்கப் புலவன் இம்மன்னனுக்கு என்னோடு என்னபகை எனக் கூறுவதின் மூலம் தான் எதிர்பார்த் ததைவிட அள்ளித்தந்தான் மன்னவன் என்று இறும்பூதெய்தும் புலவரின் நன்றியுள்ளமும் வறுமை யைப் பார்த்து நீ யெங்கே நானெங்கே எனக் கேட்டு மகிழும் மதுரகவியார் தன்னம்பிக்கையும், வறுமை சூழினும் அவர்தம் மகிழ்வுள்ளம் மாறா இயல்பும், கறி சமைப்பதற்குக் கற்பக மரங்கள் நிறைந்த சோலை யையே வெட்டிவிடலாமா? எனக் கேட்கும் ஒப்பிலா மணிப்புலவரின் அன்புள்ளத் துடிப்பும், இவை போன்ற பிறபண்புகளும் கற்பனையுருவில் மிளிரக் காணலாம்.

பிறவகைப் பகுதியில், மலர்த்திறப்பும், கார்கால இனிமையும், தென்றல் தரு சுகமும், நிலவு மயக்கமும் பண்ணைப் பாடும் பழவீணையாம் பெண் குழந்தையின் பேச்சும், கூத்தப்பெருமானை நோக்கி அவர் தூக்கிய கால் நோகாதோ என இரங்கும் குருநமச்சிவாயரின் பக்தி உணர்வும், தான் குடித்த முலைப்பாலின் அளவு பாற்கடலினும் பெரிதாகையால் இனிப்பிறவாமை தருக என வேண்டும் பலபட்டடைச் சொக்கநாதப் புலவரின் வேண்டுகோளும், கவிமணி தேசிகவிநா யகம் பிள்ளையின் பாடல் பயின்றோர்கொண்ட இனிப் புரையும், திருவாசகம் - திருக்குறள் பாராட்டும் பயின்று வருகின்ற பகுதிகள் நினைந்து நினைந்து மகிழும் ஒருதனி நிலையை-பேரின்பத்தைத் தருவனவா யிருப்பதை நாம் உணரலாம்.

இத்தொகை நூலின் பாடல்கள் முழுவதும் கற்பனைக் கருவூலமாய், கருத்துப் புதையலாய்க் காட்சியளிப்பதைக் காணலாம். பெரும்பாலான பழங் கவிதைகளின் ஆசிரியர்கள் யாரெனத் தெரியவில்லை, தெரிந்த ஒரு சிலரின் பெயர்கள் அப்பாடல்களின் கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்நூலில் தொகுக்கப்பெற்றிருக்கும் ஒவ்வொரு தனிப்பாவும் கருத்தொளி வீசும் இரத்தினமாகத் தமிழ்ப்பெரு மக்கள் கொள்வார்களாக!

நன்றி

இத்தொகைநூலுக்குக் கல்வெட்டுப் பாடல்கள் தந்துதவிய உயர்திரு. சா. கணேசன் அவர்களுக்கும், அழகுப் பதிப்பக உரிமையாளர் திரு. கா. முத்து அவர்களுக்கும் என் இதயம் நிறைந்த நன்றி!

காரைக்குடி,
20—8—1959

ரெ. முத்துக்கணேசன்.

## தமிழ் வாழ்த்து

கடல்வாய்ப் புகுந்தாய்;
கறையான்வாய்த் தப்பி
இடர்வாய்ப் பலமொழியும்
ஈன்ருய்;—படர்தமிழே!
காலப் பிறைகண்டும்
கன்னியென் பாருன்னை
ஞாலத் தவர்மயக்கோ
நன்று!

–ரெ. முத்துக்கணேசன்.

கல் தோன்றிற்று. மண் தோன்றிற்று. உயிரினம் தோன்றியது. மக்கள் தோன்றினர். ஆடையின்றிக் காடுமலையில் திரிந்தனர், சிரிப்பும் அழுகையும் அவர் தம் மெய்ப்பாடாயின. காலம் நடந்தது. மன உணர்வு எழுந்தது. வாயினின்றும் ஒலி பிறந்தது. உள்ளத்து உணர்வை ஒலி வேறுபாட்டால் ஒருவாறு ஒருவருக் கொருவர் உணர்த்த முயன்றனர். அவ்வகையில் பன்னெடுநாள் முயற்சியில் இயற்கையில் மலர்ந்தது நம் தமிழ்மொழி. உலகமே நாகரிக மற்றிருந்த சூழ்

நிலையில் நம் தமிழக மண்ணில் பிறந்த தமிழ் மொழி இனிமையைத் தன்னகத்தே கொண்டு பண்பட்ட மொழியாய் இலங்கிற்று. ஏட்டில் தவழ்ந்தது. ஏற்புடைப் புலவர் நாவில் வீற்றிருந்து சங்கம் கண்டது. அரியணை ஏறி ஆட்சி செய்தது. ஆட்சி செய்த அன்னைத் தமிழை வாழ்த்தி வணங்குவோமாக.

எங்கும் பரந்து பரவி நிற்கும் எழிற்றமிழே! கடல் பொங்கித் தமிழகத்தின் ஒரு பகுதியை உண்ட ஞான்று உன்னையும் கொண்டது கடல், அதனுள்ளும் புகுந்து மீண்டாய், அறியார் கையில் தவழ்ந்த நீ தேடுவாரற்ற நிலையில் கறையானால் உண்ணப் பட்டாய். அதனின்றும் தப்பிப்பிழைத்தாய். இவ்வாறு பலவழியில் துன்பமுற்ற காலத்தும் தாயே நீ பலப் பல மொழிகளை இவ்வுலகிற்கு ஈன்றாய், பல்லாயிரம் ஆண்டுக்காலம் பிறைகண்டு வாழ்ந்தாய், அப்படிப் பல்லாயிரம் ஆண்டுக்காலம் வாழ்ந்தும் பல மொழி களை ஈன்றும் நின்று விளங்கும் உன்னை இவ்வுலக மக்கள்—உன்மேல் கொண்ட மயக்கத்தாலோ என்னவோ "கன்னி—கன்னி" என்றே இன்றும் அழைக்கின்றனர்! இது நன்று!




## 2

## விடிவது எப்போது!

அரவம் கரந்ததோ!
 அச்சுமரம் இற்றுப்
புரவி கயிறுருவிப்
 போச்சோ!—இரவிதான்
செத்தானே! இல்லையோ!
 தீவினையோ! பாங்கியெனக்
கெத்தால் விடியு
 மிரா! க

—ஒப்பிலாமணிப்புலவர்: த. தி.
(கா. சு. பிள்ளை பதிப்பு) பக்: 188.

காதல் நோயோ பொல்லாதது. அதிலும் இரவுப் பொழுது காதலர்களைப் படாதபாடுபடுத்தும். விடிவது எப்போது என ஏங்கச் செய்யும். காதல் வயப்பட்ட ஒருத்தி காதல் நோயால் மிகவும் வருந்தினள். வருத்தத்தோடு தன் தோழியைப் பார்த்துச் சொல்லுகிருள்.

தோழி! இன்னும் பொழுது புலரவில்லையே! உலகிற்கு ஒளி தருபவன் கதிரவன். அவனை அப்படியே பாம்பு மறைத்துக்கொண்டதோ! அல்லது அவன் ஏறிவரும் தேரின் அச்சுமரம் முறிந்து அந்தக் குதிரைகளெல்லாம் தன்னைக் கட்டியிருந்த கயிற்றினின்றும் உருவி விடுபட்டு ஓடிப்போய்விட்டனவோ! அல்லது அந்தக் கதிரவன்தான் ஒரு வேளை செத்துப் போய்விட்டானே! இல்லை வேறுஎன்னதான் ஆனுனே! இப்படி இந்த இரவு நீண்டு செல்வது எல்லாம் என்

னுடைய திவியையின் பயன்தானே! எனக்கு இந்த இரவு எப்போதுதான் விடியப்போகிறது என்று கூறி வருந்துகிருள்.

குறிப்பு:- காதலில் வாடும் காதலியின் உள்ளம் இரவுப் பொழுதானது நீண்டு செல்கிறது போலவும் உலகிற்கு ஒளி நல்கும் கதிரவனே செத்தொழிந்தது போலவும் எண்ணி மயங்குகிறது. அரவம்-பாம்பு; ஈண்டுச் சூரியனை விழுங்கும் கேது.

புரவி -குதிரை

இரவி -கதிரவன்.

ஒப்பிலாமணிப்புலவர்:- இப்பெயருடையார் இருவர்.

1. இவர் தஞ்சைச் சரபோசி மன்னன் காலத்தவர் (18ஆம் நூ. முற்பகுதி) இலக்கண விளக்கம் வைத்தியநாத நாவலரின் மாணவர். புதுப் புத்தூர் என்னும் ஊரில் வாழ்ந்தவர் என்று பூர்ணலிங்கம்பிள்ளை கூறுகின்றனர். தாம் எழுதிய கும்பகோணப் புராணத்திலே ஆசிரிய வணக்கம் கூறுகின்ருர். சிவரகசியம் என்னும் பெருநூலும் இவரியற்றியதாகும்.

2. இவர் குமணன் வரலாற்றைச் செய்யுள் வடிவிலே பாடியவர் (19ஆம் நூ.)

–கலைக் களஞ்சியம்:
தொகுதி இரண்டு: பக்: 672.

ஒப்புமை:–

காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே உளேன்!

–திருக்குறள்: 1167,

# 3

## பொழுது புலராதோ

ஆழிவாய்ச் சத்தம்
அடங்காதோ? யான்வளர்த்த
கோழிவாய் மண்கூறு
கொண்டதோ ?—ஊழி
திரண்டதோ! கங்குல்
தினகரனும் தேரும்
உருண்டதோ பாதாளத்
துள்! உ

–ஒப்பிலாமணிப்புலவர்: த. தி.
(கா. சு. பிள்ளை பதிப்பு) பக்: 188.

காலவரையறைகள் சரியாக முறையாகப் போய்க் கொண்டேயிருக்கும். இஃது இயற்கை. ஆனல் நாம் ஏதாவது விருப்புடைய வேலையில் ஈடுபட்டால் நேரம் போவதே தெரிவதில்லை. இதை நம் வாழ்க்கையில் காணலாம். அதிலும் காதல் வயப்பட்டு வாடுபவர் களுக்கோ ஒருநாள் பொழுது ஒரு யுகமாகத் தோன்றும். கடற்கரைப் பட்டினத்துக் காதலி ஒருத்தி தன் மனத்திற்குகந்த ஒருவன்பால் காதல் கொண் டாள். காதல் முற்றிப் பெரிதும் வாடினுள். இரவு வந்தது. தாங்கமுடியாமல் தான் படும் துன்பத்தைத் தோழியிடம் கூறுகிருள்.

இந்தக் கடல் ஏன் இப்படி அலறுகின்றது. இந்த ஒலிதான் அடங்காதோ! நான் மிக அன்பாக வளர்த்தேனே இந்தக்கோழியை! அதாவது கூவித் தொலேக்காதோ! அதன் வாயில் என்ன மண்ணுயிருக் கிறது! ஊழிக்காலம் என்று சொல்லுகிருர்களே அது ஒன்ருகத் திரண்டு இப்படி நீண்ட பெரிய இரவாக வடிவெடுத்ததோ! தேரோடு கதிரவனும் பாதாளத்

துள் உருண்டு விழுந்து விட்டானே! என் செய்வேன்! என்கிருள்.

குறிப்பு:- காதலனை நினைந்து வாடும் காதலியின் உள்ளத்திற்குக் கடல் ஒலி அருவருப்பையும், விடியற் பொழுதைக் கூவி அழைக்காத சேவலின் நிலை சினத்தையும், விடியா நீளிரவு ஊழிக்காலத்து அச்சத்தையும், தேரோடு கதிரவனும் பாதாளத்துள் உருண்டு விழுந்தனனே என்பது ஏக்கத்தையும் சுட்டுகின்றன. இக்கவிதை காட்டும் கற்பனை இன்பம் நினைந்து நினைந்து களிப்புறத்தக்கதொன்று.

## 4

## உளவனும் ஒண்தொடியும்

மையூருங் கண்ணுர்
  மயங்கப் பொருகரும்பு
கையூருங் காமாஉன்
  கண்ணுணை—செய்யூர்
வளவனையி னுன்பிரிந்த
  வாறுனக்குச் சொன்ன
உளவனையி னுனென்
  றுரை! ந

–ஒப்பிலா மணிப்புலவர்: தனிப்பாடல் திரட்டு:
(கா. சு. பிள்ளை) பக்: 188

உன் தலைமேல் ஆணை உண்மையைச் சொல் என்று நாம் சொல்லக் கேட்டிருக்கிறோமல்லவா! செய்யூர் என்னும் ஊர் தன் பெயருக்கேற்ப நல்ல வயல்களை உடையது. அங்கு வளவன் நயினுன் என்ற

ஒரு தலைவன் வாழ்ந்துவந்தான். ஒரு முறை அவன் தன் வயலுக்குப் போய்க்கொண்டிருந்தான். அப்பொழுது ஒரு பெண் அவனைக் கண்டாள். காதல் கொண்டாள். அவனையே தன் கணவனாக எண்ணினாள். எந்நேரமும் அவனையே எண்ணி வாடி வருந்தினாள். எப்பொழுதும் தோழிகளிடமும் மற்றவர்களிடமும் அவனைக் கணவனாகவே பாவித்துப் பேசுவாள். ஒரு நாள் பெரிதும் காதல் வேதனை தாங்காமல் இருந்தாள். அப்பொழுது மன்மதனுடைய திருவிழா நடக்கப்போவதாகப் பேசிக்கொண்டனர் மக்கள். உடனே இவள் எண்ணுகிறாள். நம் கணவனாகிய நயினனைக் காணவில்லை. ஏதேனும் வெளியூர் சென்றிருக்கலாம். அது சரி அதற்காக நான் ஏன் பிரிந்த துன்பத்தால் வாடவேண்டும். ஒரு வேளை இந்த மன்மதனுடைய வேலைபோலும்! அவர் என்னை விட்டுப்பிரிந்த செய்தியை இந்த மன்மதனுக்கு யார் சொன்னார்கள் என்று தனக்குள் மன்மதனை முன்னிலைப்படுத்திச் சொல்லிக்கொள்கிறாள்.

மைதீட்டப்பெற்ற கண்களையுடைய பெண்கள் காதல் மயக்கத்தால் வாடும்படியாக, கணை எரிந்து போர் செய்வதற்குரிய கரும்பு வில்லைக் கையில் ஏந்திய மன்மதனே! உன்னுடைய கண்ணின்மேல் ஆணையிடுகிறேன்! செய்யூரிலிருக்கும் என் காதலர் வளவன் நயினனை நான் பிரிந்து வாடுகிறேன் என்ற செய்தியை உனக்குச் சொன்ன ஒற்றன் யார் என்று மட்டும் உரைத்துவிடு என்கிறாள்.

குறிப்பு:— தான் காதலனைப் பிரிந்த செய்தி கேட்டு மன்மதன் தன் அம்பை எய்து தன்னை வாடச்செய்தான் எனத் தலைவி நினைந்தாள். அப்பிரிவைச் சொன்ன ஒற்றன் யார் என்று மன்மதனை அவள் கேட்பதன் மூலம் தான் காதலனை அணையாமல்

வருந்துவதாகக் காதல் மயக்கக் கற்பனை யில் ஏங்குகிறது அவளது காதல் உள்ளம். காதல் நோய் மன்மதன்மேல் அளவிறந்த சீற்றமாக எழுகிறது. ஆனால் மன்மத னிடத்துச் சீற்றத்தைச் செலுத்த இயல வில்லையாதலால் அச் சீற்றம் ஒற்றன்மீது பாய்வதாகச் சித்தரிக்கின்றது இக் கவிதை.

**வளவன் நயினன்** – வளவன் இயற் பெயர்; நயினன் என்பது அவன் போர்ச் சிறப்புக் கருதிப்பெற்ற சிறப்புப் பெயராகும். நயினர் என்னும் பட்டப் பெயரினையுடைய மரபினர் தென்னார்க்காடு மாவட்டத்தில் இன்றும் உளர்.

காமன் – மன்மதன்
உளவன் – ஒற்றன்,

'வளவனயினன்' என்பது 'உளவனையினன்' என்று பின்வரும் எதுகை நோக்கி 'வளவனை யினன்' எனத் திரிந்தது.

## 5

## நெஞ்சு விடுதூது

சென்றதுகொல் போந்ததுகொல்
செவ்வி பெருந்துணையும்
நின்றதுகொல் நேர்மருங்கில்
கையூன்றி – முன்றில்
முழங்கும் கடாயானை
மொய்ம்மலர்த்தார் மாறற்
குழந்துபின் சென்றஎன்
நெஞ்சு! ௪

– பெருந்தொகை: பா: 686,

நெஞ்சு பொல்லாதது என்பர். அதிலும் காதல் நெஞ்சோ படாதபாடு படுத்தும். ஒரு முறை பாண்டியன் உலா வந்தான். அவன்மேல் காதல்கொண்டாள் ஒரு பெண். அவன் அழகும், அணிந்திருந்த மாலை அழகும் அவனது பட்டத்து ஆண் யானை வடிவும் எல்லாம் அவள் கண்ணுக்குள்ளே நின்று காட்சியளித்துக்கொண்டேயிருந்தன. இதை அவளால் மறக்கமுடியவில்லை. அன்று இரவு தூக்கமே வரவில்லை. ஏன் விழித்துக்கொண்டிருக்கிறாய் என்று தோழி கேட்கத் தலைவி கூறுகிறாள்.

முன் முற்றத்திலே தலை தூக்கி நின்று முழங்கும் பட்டத்து மதயானையையுடையவனும் வண்டுகள் மொய்க்கின்ற மலர் மாலையை அணிந்தவனுமானவன் நம் பாண்டிய மன்னன். நான் அவனிடத்துக் காதல் கொண்டேன். என் நெஞ்சு ஏங்கித் தவித்தது. அவன் அருளைப் பெறவேண்டுமென்றும் துடியாய்த் துடித்தது. நீயே அவன்பின் செல் என்றேன். அழகில் மயங்கி உலா வந்த அவன் பின்னே சென்றது. ஒருவேளை அது அவன் பின்னாலே அவன் விற்றிருக்கும் அந்த மனைக்குள்ளேயே சென்றுவிட்டதோ! சென்றது அவனைக் காணமுடியாமல் வெளியே வந்துவிட்டதோ! இல்லை அவனைக் காண்பதற்கு ஏற்ற காலத்தைப் பெருந் துணையாகக்கொண்டு அதனை எதிர்நோக்கி அழகிய தன் இடையில் கையை ஊன்றிக்கொண்டு அவன் வாயிலில் நின்று காத்துக்கொண்டிருக்கிறதோ! என்கிறாள்.

குறிப்பு:— கண்ணுக்குப் புலனாகாத உள்ளம் அரசன் பின் அவன் மனைக்குள் சென்றதாகவும், அவனைக் காணமுடியாமல் தவித்ததாகவும் பின் அவனைக் காணுதற்குரிய ஏற்ற காலத்தைப் பெருந்துணையாகக் கொண்டு அழகிய இடையில் கையையு

ஊன்றிக்கொண்டு நிற்பதாகவும் தலைவியின் நெஞ்சைக் கவிஞர் புனைந்துரைக்கும் இப்பகுதி இலக்கணையின் பாற்படும். அங்ஙனம் புனைந்துரைக்குங்கால் ஒரு பெண் விடுக்கும் நெஞ்சு பெண்ணுருவையே கொண்டு செல்லும் என்ற ஓர் அருங் குறிப்பு 'நேர் மருங்கில் கையூன்றி' என்ற மெய்ப்பாட்டால் பெறப்படும்.

செவ்வி–ஏற்றகாலம்; மன்னனைக் காணுதற்குரிய செம்மையான காலம்.

மருங்கு-பக்கம்; ஈண்டு இடைஎனக்கொள்க.

கடாயானை – மதயானை.

'கடாஅக் களிற்றின்மேற் கட்படாம்'
- திருக்குறள்: 1087

மாறன் – பாண்டியன்.

## 6

## பழியொருபால்!

உழுத உழுத்தஞ்செய்
ஊர்க்கன்று மேயக்
கழுதை செவியரிந்
தற்றால் — வழுதியைக்
கண்டன கண்க
ளிருப்பப் பெரும்பணைத்தோள்
கொண்டன மன்னோ
பசப்பு! ரு

-தொல். பொருள். பேராசிரியர்: நூற்பா 489: மேற்.

'கன்று மேயக் கழுதையின் காதை அறுத்தது போல, என்பது பழமொழி. பாண்டியன் உலா வந்தான். ஒரு பெண் அவனைக் கண்டு காதல் கொண்டாள். அவன் நினைவால் வாடினள், அவள்

அழகு வாடியது. உடல் வெளிறிய நிறத்தைப்பெற்றது. தோள் மெலிந்தது. தானே தன்னிலையை அறிந்தாள். அழகான தன் தோள் மெலிந்துவிட்டதே என ஏங்கினுள் அவளே தன் நெஞ்சோடு சொல்லிக்கொள்கிருள்.

பாண்டியன் உலா வந்தான். அவனைக் கண்டு களித்தன என்னுடைய கண்கள். அது குற்றந்தான். குற்றம் புரிந்ததற்கு அவை தாமே தண்டனையை அனுபவிக்க வேண்டும். அதை விடுத்து இந்த அழகிய பெருத்த மூங்கிலைப்போன்ற தோள்கள் ஒரு குற்றமும் புரிந்தில. ஆனுல் இத் தோள்கள் மெலிந்து சோகை படர்ந்து வெளிறு நிறத்தைக் கொண்டனவே! நன்ருகவிருக்கிறது! இது, வயலை நன்ருக உழுது அறுவடை செய்தபின்னர் உழுந்தைப் பயிர் செய்வர்: அப்பயிரை ஆளில்லாத போழ்து ஊரில் மேயும் கன்றுகள் மேய்ந்துவிடும்; பின் அதற்குரியவன் வந்து பார்க்கும்பொழுது அங்குத் திரிந்த கழுதையின் காதை அறுத்துத் தன் பழியைத் தீர்த்துக்கொண்டது போலல்லவாயிருக்கிறது! என்கிருள்.

குறிப்பு:- பணை – மூங்கில்
வழுதி – பாண்டியன்
பசப்பு – சோகைபடர்ந்த வெளிறு நிறம்; மகளிர்க்குக் காதற் பிரிவால் உண்டாகும் நிற வேறுபாடு.
கண்கள் இருக்கத் தோள் மெலிந்தது என்று காரணம் சிறப்பித்துப் பழமொழி விடையாகக்கூறுவதால் இதனைஏதுநுதலிய முதுமொழியணி என்பர் அணிநூலார்.

ஒப்புமை:

கண்டன உண்கண்
கலந்தன நல்நெஞ்சம்
தண்டப் படுவ
தடமென் தோள்!

–முத்தொள்ளாயிரம்: பா. எண். 33.

# 7

## கட்டுக்கடங்காமை!

பொன்னு ரார்பிற்
புனைகழற்காற் கிள்ளிபேர்
உன்னேனென் றுழுலக்கை
பற்றினேற் — கென்னே
மனனெடு வாயெல்லாம்
மல்குநீர்க் கோழிப்
புனலுடன் பேரே
வரும்!

–யாப்பருங் கலக்காரிகை: நூற்பா 9:மேற்:

யாராவது ஒருவர் நம்மிடம் வந்து ஒன்றைச் சொல்லி இதை நினைக்காதீர்கள் மறந்துவிடுங்கள் என்று சொன்னல் அதுவே முதலில் நம் நினைவிற்கு வருதல் இயற்கை. சாதாரண நிகழ்ச்சிகளே இப்படியென்றுல் காதலைப்பற்றிக் கூறவே வேண்டுவதில்லை! ஒரு பெண் சோழன் மேல் காதல் கொண்டாள். அவன் உலா வருகின்ற அழகு – அவன் அணிந்துள்ள அணி அழகு எல்லாம் அவளை மயக்கின. அவனையே நினைந்து நினைந்து வாடினுள். வீட்டில் எவ்வேலை செய்யப் புகினும் அவன் நினைவாகவே இருக்கத் தொடங்கினுள். இந்த நிலையில் அடுத்த வீட்டில் உதவிக்கு உலக்கை போடுவதற்கு உடன் செல்லவேண்டியதாயிற்று. உரலில் ஒரு பொருளைப் போட்டு உலக்கை கொண்டு மாறி மாறி இருவர் இடிக்க வேண்டும். இப்படி இடிக்கும்பொழுது அத்துன்பம் தெரியாமலிருக்க இடிப்பவர் மாறி மாறிப் பாடிக்கொண்டே இடிப்பர். இடிப்பதற்கு அடுத்த வீடு சென்றுள் அப் பெண். போகும்பொழுது அப் பெண், சரி இன்று நாம் பாடும்பொழுது மறந்து

கூடச் சோழனைப்பற்றிப் பாடிவிடக்கூடாது; பாடிவிட்டால் நம் காதல் வெளிப்பட்டுவிடும் என்று தனக்குள் எண்ணி உறுதி செய்துகொண்டாள். அங்குப் பல பெண்கள் கூடி இடித்துக்கொண்டிருந்தனர். இவள் முறை வந்தது. இவளும் மற்றொரு பெண்ணும் உலக்கை கொண்டு மாறிமாறி இடிக்கத் தலைப்பட்டனர். அப்பொழுது இவள் பாடத் தொடங்கினாள், உள்ளம் அவனைப்பற்றியே நினைக்க, வாய் அவனைப்பற்றியே கூறத் தயாராகியது. என்ன செய்வாள்! இந்த நிலையில் ஒருவாறு உள்ளத்தோடு போராடித் தன்னைத் தேற்றிக்கொண்டு பின் வீட்டிற்கு வந்தாள். தனித்திருந்து தனக்குள்ளே சிந்தித்துச் சொல்லிக்கொள்கிறாள்.

பொன்னினால் ஆன அணிகளை மார்பிலும் வீரக் கழலைக் கால்களிலும் அணிந்தவன் சோழ மன்னன். அவனுடைய பெயரைக் கொஞ்சங்கூட நினைக்கக் கூடாது என்று உறுதி செய்துகொண்டு தடவைப்படி மாறி மாறி இடிப்பதற்காக உலக்கையைப் பற்றினேன். பற்றினேன் பார்! உடனே மனமும் அதனொடு வாயும் நீர்வளமிக்க உறையூரைத் தலைநகரமாகக் கொண்ட நீர் நாடனான சோழனுடைய பெயரையே நினைக்கவும் சொல்லவும் தலைப்படுகின்றனவே! இது நன்றாயிருக்கிறது! என்று கூறிக்கொள்கிறாள்.

**குறிப்பு :-** காதல் உள்ளம் கனவிலும் நனவிலும் காதலனையே நினைந்து ஏங்கும் என்பதைச் சுட்டுகிறது இக்கவிதை.

வள்ளை – இருவர் தடவை மாறிமாறி உலக்கை கொண்டு இடிப்பது.
– ‘உரைப்பபோல ...ழ்கொள்புகூவ’
– அகம்: 25

கிள்ளி – சோழர்களுக்குரிய சிறப்புப்பெயர். கோழி – உறையூர். இவ்வூர்க்கோழி ஒரு

யானையோடு போர் செய்து வென்றதனல் இவ்வூர் கோழி எனப் பெயர் பெற்ற தென்பர்.

'முறஞ்செவி வாரணம் முன்சமம் முருக்கிய
புறஞ்சிறை வாரணம் புக்கனர்'
-சிலப்பதிகாரம்: நாடுகாண் காதை.
வரி: 247—;248

வள்ளைப்பாட்டு:-

தீங்கரும்பு நல்லுலக்கையாகச் செழுமுத்தம்
பூங்காஞ்சி நீழல் அவைப்பார் புகார்மகளிர்
ஆழிக் கொடித் திண்டேர்ச் செம்பியன் வம்பலர்
[தார்ப்
பாழித் தடவரைத்தோட் பாடலே பாடல்!
பாவைமார் ஆரிக்கும் பாடலே பாடல்!
–சிலம்பு: வஞ்சி: வாழ்த்துக்காதை: 26.

## 8

## வினை ஏற்றம்

புனனுடர் கோமானும்
பூந்துழாய் மாலும்
வினைவகையான் வேறு
படுவர்—புனனுடன்
ஏற்றெறிந்து மாற்றலர்பால்
எய்தியபார் மாயவன்
ஏற்றிரந்து கொண்டமையி
னல்! எ

ரக்க

–தண்டி: நூற்பா 50: மேற்.

ஒருமுறை பகைவரை முறியடித்துப் போரில் வென்ற சோழன் உலா வந்தான். அவ்வுலா மிக

அழகாயிருந்தது. ஒரு பெண் மன்னனைக் கண்டாள். காதல் கொண்டாள். காதல் வயப்பட்டு மயங்கி அப்படியே அவனைப் பார்த்துக்கொண்டே நிற்கிருள். பக்கத்தில் மக்கள் பேசுவது காதில் விழுகிறது. பார்த்தாயா! மன்னன் எவ்வளவு அழகாயிருக்கிருன், காக்கும் கடவுளாகிய திருமால் மாதிரியல்லவா யிருக்கிருன் என்கிருர்கள். இதைக் கேட்ட தலைவி தோழியைப் பார்த்துச் சொல்லுகிருள்,

காவிரிபாயும் சோழநாட்டு மன்னன் பகைவரோடு போர் புரிந்து அவர்கள் விடுத்த வேலைத் தான் ஏற்றும் அவர்கள் மேல் தான் வேல் எறிந்தும் பெற்ருன் பகைவர் நாட்டை. அப்படி உழைத்துத் தன் வீரத்தைக் காட்டிப் பெற்றது இந்த உலகம். ஆனால் திருமாலோ நீரால் தாரை வார்த்ததை ஏற்றும் எனக்கு மண் வேண்டும் என இரந்தும் பெற்ருன் இவ்வுலகை. இவ்வாருக, காவிரி பாயும் சோழநாட்டு மன்னனும் துளசிமாலை அணிந்த திருமாலும் செயலில் ஒன்று என்கிருர்களே! இல்லை; செயலால் அவர்கள் வேறுபடுவர்! என்கிருள்.

குறிப்பு:- தன் காதலன் சோழன் போர்க்களத்தில் வீரத்தைக்காட்டி இம்மண்ணை வெற்றிகொண்டானே யல்லாது திருமாலைப்போல இரந்து பெறவில்லை என்று தலைவி கூறுவதன் மூலம் இரத்தலால் இகழ்ச்சிக் குறிப்பைக் காட்டி வீரத்தால்தான் தன் காதலன் பெற்ருன் என்று பெருமிதப்படும் காதல் உள்ளம் வெளிப்படுகிறது,

புனல் நாடர்கோமான் — சோழன்: ஈண்டு காவிரிபாயும் நாட்டின் தலைவன் எனக் கொள்க.

மாற்றலர்—பகைவர்.

கதைக் குறிப்பு:- 'மாயவன் ஏற்று இரந்துகொண்டமை' யார் எது வேண்டுமானாலும் தருவன் எனப் பறை சாற்றினன் மாபலிச்சக்கரவர்த்தி. அப்பொழுது திருமால் வாமண அவதாரம் எடுத்து வந்து மூன்றடி மண் கேட்க, சக்கரவர்த்தி தாரை வார்த்துக்கொடுக்க இவ்வுலகைத் திருமால் ஓரடியால் அளந்த கதை.

## 9

## நிற ஏற்றம்

சுற்றுவிற் காமனும்
    சோழர் பெருமானும்
கொற்றப்போர்க் கிள்ளியும்
    கேழொவ்வார்—பொற்றொடியே!
ஆழி யுடையான்
    மகன்மாயன் செய்யனே
கோழி யுடையான்
    மகன்! அ

–தண்டி ; நூற்பா 50 : மேற்.

சோழமன்னன் உலா வந்துகொண்டிருந்தான். அவனைப் பெண்கள் கூட்டம் கூட்டமாகத் தங்கள் தங்கள் விட்டின் வாசலில் நின்று கண்டுகளித்தனர். காதற் கண்ணோடு ஒவ்வொருவரும் பார்க்கின்றனர். அவன் செம்மேனி கண்டு மயங்கினர். ஒவ்வொருவரும் அவன் அழகைப்பற்றியே பேசினர். அதில் ஒருத்தி, 'பார்த்தாயா! நம் சோழன் எவ்வளவு அழகாயிருக்கிறான். மன்மதனைப் போலல்லவா இருக்கிறான்!' என்று சொன்னாள். இச்சொற்கள் சோழன்மேல் காதல் கொண்ட பெண்ணொருத்தியின் காதில் விழுந்தது. அவள் தன் தோழியைப் பார்த்துச் சொல்லுகிறாள்.

பொன் வளையல்களை அணிந்த தோழியே! வளைந்தமைந்த கரும்புவில்லை ஏந்திய மன்மதனும் போரில் வெற்றி ஒன்றைத் தவிர வேறு அறியாத நம் சோழர் தலைவனும் ஒப்பாக இருக்கிறார்கள் என்று சொல்கிறார்களே! இல்லை! அவர்கள் நிறத்தில் ஒப்பாகார். சக்கரம் கொண்ட திருமால்மகன் கருநிறமமைந்தவன். உறையூரைக்கொண்ட நம் சோழமன்னன் மகனோ செம்மை நிறம் படைத்தவனே! என்கிறாள்.

குறிப்பு:- உலகில் ஒப்புமைகூறவொண்ணா அழகினன் சோழன் என்று எண்ணுகிறது காதல் உள்ளம்.

சுற்றுவில் — வளைந்தமைந்தவில்.
கேழ் — நிறம்
ஆழியுடையான் — சக்கரம்கொண்ட திருமால்.
கோழியுடையான்—உறையூரைக் கொண்ட சோழன்.

காமன்:- உயிர்களுக்குக் காமத்தை யுண்டாக்கும் தெய்வம் என்றும், அழகின் தேவன் என்றும் புராணங்கள் கூறும். இவனுக்குக் காமவேள் — மன்மதன் — வேனிலான் முதலான பல பெயர்களுண்டு. இவன் திருமாலின் மனத்திற் பிறந்தவன். இவன் போர்க்குரிய படைஞர்—மங்கையர்; வில்—கரும்பு; அம்புகள்—தாரை, அசோகு, மா, முல்லை, நீலம் என்னும் ஐந்துமலர்கள்;

-கலைக்களஞ்சியம், தொகுதி மூன்று.
பக் ; 512.

## 10

## கோதையும் கோதையும்

எருத்துமேல் நோக்குறின்
வாழலேம் என்னும்
கருத்திற்கை கூப்பிப்
பழகி—எருத்திறைஞ்சிக்
கால்வண்ணம் அல்லால்
கடுமான்தேர்க் கோதையை
மேல்வண்ணம் கண்டறியாள்
வேந்து! ௧௦

—பெருந்தொகை: பா: 774.

வாழ்வில் பொல்லாப்பு நேருமோ என்ற அச்சம் இருந்து கொண்டிருப்பது இயல்புதானே! ஒரு பெண் சேரனிடத்துக் காதல் கொண்டாள். அம் மன்னன் உலாவருங்காலத்து அவனைக்காணஉள்ளம்துடிக்கும். அவன் உலாவிட்டை நெருங்கும். ஆசையோடு பார்க்க வருவாள். ஆனல் அவனை நன்ருக மேல்நோக்கித் தான் பார்ப்பதை ஊரார் பார்த்துவிட்டால் என்ன செய்வது என்ற பயம்வேறு இடையில் வந்துவிடும். உடனே தலை கவிழ்ந்து விடுவாள். அவன் கால் வண்ணத்தை மட்டும் கண்டு களிப்பாள். இப்படி ஒருநாளா! எத்துணையோ நாட்கள். காதலால் வாடினுள். இந்த நிலையை அறிந்த தோழி தனக்குள்ளே தன் நெஞ்சொடு சொல்லிக்கொள்கிருள்.

விரைவும் அமைதியுங்கொண்ட குதிரை பூட்டிய தேரின் மேல் உலா வருகின்றவன் சேர மன்னன். அவனை நன்ருக மேல் நோக்கி நிமிர்ந்து பார்ப்பதை ஊரார் பார்த்தால் என்ன நினைப்பர்! காதல்வயப்பட்டு விட்டாள் என்று அலர் தூற்றுவர். அவ்வலரைப்

பொறுத்துக்கொண்டு வாழ்வ தெங்ஙனம்! ஆகவே நிமிர்ந்து பார்த்தால் வாழமுடியாது என்ற கருத்தில் தலைகவிழ்ந்து கைதொழுது வணங்குகிறாள். மேலும் தலை கவிழ்ப்பதனால் அவ்வேந்தனுடைய கால் வண்ணத்தைத்தான் கண்டறிந்தாளேயன்றி அவன் தன் மேல் வண்ணத்தை முகம் – மார்பு – தோள் முதலியவற்றைக் கண்டறியாதவளாயிருக்கிறாளே! என்று தோழி தனக்குள்ளே அங்கலாய்த்துக்கொள்கிறாள்.

குறிப்பு: காதலன் அழகை நன்றாகப்பார்த்துப் பருகத் துடிக்கிறது காதலியின் உள்ளம். ஆனால் நிமிர்ந்து அவனை நேராகப் பார்த்துவிட்டால் தன்காதல் வெளிப்பட்டு ஊரார் அலர் தூற்றுவரே என்றும் அஞ்சுகிறது அவ்வுள்ளம், இருப்பினும் அலருக்கு அஞ்சித் தன் காதலாவது நிலைக்கட்டும் என்று எண்ணி முடிவில் கால் வண்ணம் கண்டு கைதொழுகிறாள் தலைவி. இந்நிலையறிந்த தோழியின் உள்ளம் அவள் நிலைக்கு இறங்கித் தனக்குள் வருந்துவதை மிக நன்றாகக் காட்டுகிறது கவிதை.

எருத்து – கழுத்து

கோதை – சேர மன்னர்களுக்குரிய சிறப்புப் பெயர்.

நிமிர்ந்து பார்ப்பின் மன்னன் சீற்றங்கொண்டு தண்டிப்பான் என்ற அச்சம் காரணமாகத் தலை கவிழ்ந்து கை தொழுதாள் என இறை அச்சத்திற்கு இப்பாடலை மேற்கோள் காட்டுகிறார் பேராசிரியர். பொதுவாக அலருக்கு அஞ்சுவதுதான் தலைவியின் இயல்பு என்பது நம் இலக்கிய மரபாதலின் அலரின் பால்கொண்ட அச்சம் எனக்கொள்க.

## 11

## காதல் மருந்து

தேர்க்கொடி. மாமறுகில்
தெண்மணலைச் சேயிழையார்
மார்க்கு மருந்தாக்க
வல்லவாம் யார்க்கும்
உயிராய செங்கோல்
உயர்நெடுந்தேர் வானன்
அயிரா வதத்தின்
அடி ! ௧௦

-பெருந்தொகை: பா. 1175.

காதல் மிகுமேயானல் ஒருவகையான மயக்கம் பிறக்கும்; பின் அம் மயக்கம் முற்றிப் பித்துப் பிடித்த நிலையினை அடையும். காதலனேடு தொடர்புடைய பொருள்களைப் பார்த்துப் பேசும்; சிரிக்கும். வாணன் ஒருமுறை தன் பட்டத்து யானையின்மேல் உலா வந்தான். ஒரு பெண் மட்டுமல்ல; பல பெண்களும் அவனைக்கண்டு காதலுற்றனர், வாடினர், நோயால் உடல் மார்பு முதலியன மெலிந்தன. இது தோழி களுக்குத் தெரியும். அதில் ஒரு தோழி காதல்கொண்ட பெண்களைப்பற்றியும் அவர்களுடைய காதல் நோயைப் பற்றியும் மற்ருெரு தோழிபால் கூறுகிறுள்.

பார்த்தாயா! இந்தப் பெண்களின் காதல் தவிப்பை! புலவராயினும் - மக்களாயினும் - தன் கீழுள்ள சிற்றரசர்களாயினும் யாராயினும் சரி ஒவ்வொருவரும் நம் வாணர்குல மன்னனுடைய செங்கோலை விரும்பி ஏற்கின்றனர். அத்துணை பேருக்கும் உயிராக விளங்கும் செங்கோலையும், உயர்ந்த நெடிய தேர்ப்படையையும் உடையவன் நம்

வாணர்குல மன்னவன். அவனுடைய கொடி கட்டிய தேர்கள் போவதற்குரிய பெரிய இந்தத் தெருக்களில் கிடக்கும் தெளிந்த மணல்கள் வாணன் ஏறி உலா வரும் யானையின் அடிகள் பட்டதனுல் பெண்களின் மார்பிலுண்டாகும் காதல் நோய்க்கு மருந்தாகிக் குணப்படுத்த வல்லன! என்கிருள்.

குறிப்பு:- வெற்றுச் சிறுமணலும் தலைவனது யானையின் அடிபடக் காதல் நோய்க்கு மருந்தாயிற்று என்பதன் மூலம் காதலின் நுணுக்கம் பெறப் படுகிறது.

மாமறுகில் - பெரிய தெருவில்

அயிராவதம் - பட்டத்து யானை

மார்க்கு - மார்புக்கு; மார் என்ற சொல் லாட்சி மாரடைப்பு என வழக் கிலும் இருத்தல் காண்க.

சேயிழையார் - பெண்கள்

இப்பாடல் திருவண்ணமலை அருணசலேச்சுவரர் கோயில் சாசனத்திலுள்ளது எனக் குறிப்பிட்டிருக் கிருர் பெருந்தொகை ஆசிரியர்.

ஒப்புமை:- ஆடுகோ! சூடுகோ!
ஐதாக் கலந்துகொண்டு
ஏடுகோ டாக
எழுதுகோ! —நீடு
புனவட்டப் பூந்தெரியல்
பொற்றேர் வழுதி
கனவட்டங் கால்குடைந்த
நீறு!

—முத்தொள்ளாயிரம் பா. எண். 75

தெய்வத் தண்ணந்துழாய்த்தாராயினும் தழையாயினும் தண்கொம்ப தாயினும் கீழ்வேராயினும் நின்ற மண்ணாயினும் கொண்டு வீசுமினே!

-நாலாயிரம் ; திருவிருத்தம் ; 2530

# 12

## கைதொழுகை

கொய்தளிர்த் தண்படலைக்
கூத்தப் பெருஞ்சேந்தன்
வைகலும் ஏறும்
வயக்களிறே! —கைதொழுவல்
காலேக வண்ணனைக்
கண்ணாரக் காணவெம்
சாலேகம் சார
நட! கக

-பெருந்தொகை: பா. 1036.

காதல் பித்து மிகுமேயானால் ஒருவகையான வெறி பிறக்குமென்பர். அது தன்னையும் மறந்து கண்ட பொருள்களோடு பேச முற்படும், சேந்தன் என்பவன் கூத்த நாட்டின் தலைவன், குறுநில மன்னன். அவன் ஒருமுறை தன் பட்டத்து யானையின் மேல் உலா வந்தான். அவனைக் கண்டு காதலுற்றாள் ஒரு பெண். காதல் பெருகிற்று. நிலை கடந்துவிட்டது. ஒருவகையான வெறியுணர்வைப் பெற்றாள். எப்பொழுதும் அவனைப் பற்றிப் பேசுவதும் அவன் பொருள்களைக் கண்டு பேசுவதும் இப்படியாக இருந்தாள். ஒருநாள் அவள் வீட்டு வழியாகத் தலைவனது பட்டத்து யானையை எங்கோ கொண்டு சென்றார்கள். அப்பொழுது அதனைப் பார்த்தாள் உடனே அதனை நோக்கிப் பேசுகிறாள்.

புதியனவாய்க் கொய்த தளிரோடுகூடிய இலைகளை மாலையாகக் கட்டி அணிபவன் கூத்த நாட்டின் பெருமைக்குரிய மன்னவன் பெருஞ்சேந்தன், அவன் நாள்தோறும் ஏறி உலா வருகின்ற வலிமைமிக்க பட்டத்து ஆண் யானையே! உன்னைக் கைதொழுது கேட்டுக்கொள்கிறேன். கலவைச் சந்தனம் பூசிய அம் மன்னன் உன்மேல் அமர்ந்து உலா வருவானல்லவா! அப்பொழுது நீ எங்கள் வீட்டுச் சாளரத்தை ஒட்டி நடந்து செல்வாயாக! ஏனென்றால் நான் அவனைக் கண்ணாரக் கண்டு களிப்பதற்காக! என்கிறாள்.

குறிப்பு:- ‘சாலேகம் சார நட’ என்பது முத்தொள்ளாயிரத்தின் ஈற்றடி. அதனைக் கண்டு மிகவும் அனுபவித்த இக் கவிஞர் தன் உள்ளங் கவர்ந்த அவ்வடியை அப்படியே ஈண்டு வைத்துப் பாடியுள்ளமை காண்க.

படலை – இலைமாலை
காலேகம்– கலவைச் சந்தனம்
சாலேகம்– சாளரம்

ஒப்புமை :-

துடியடித் தோற்செவித்
தூங்குகைந் நால்வாய்
பிடியேயான் நின்னை
யிரப்பல் — கடிகமழ்தார்ச்
சேலேக வண்ணனொடு
சேரி புகுதலுமெஞ்
சாலேகம் சார
நட!

– முத்தொள்ளாயிரம் பா. : 72

## 13

### கால்தொழுகை

பாணன் மதுரைப்
பதியாள வைத்தபிரான்
வாணர் புகழ
வருமாறை — வாணன்
கரும்போ தகமேநின்
கால்பணிவேன் மீண்டு
வரும்போ தகமே
வரின்! கஉ

–பெருந்தொகை. பா. எ: 1191.

உணர்ச்சி இதயத்தில் எத்துணையோ நம்பிக்கைகளை எழுப்புகிறது. அதற்குரிய தெம்பையும் ஊட்டுகிறதல்லவா! வாணர்குல மன்னவன் பெரிய கொடை வள்ளல். யார் வந்து எதைக்கேட்டாலும் இல்லை என்னாது கொடுக்கும் வள்ளல். ஒரு நாள் அவன் தன் பட்டத்து யானைமேல் உலா வந்தான். அவனை ஒரு பெண் கண்டாள். காதல் கொண்டாள். நாட்கள் சென்றன. காதலுணர்ச்சி பெருகிற்று. அவனையே எண்ணி எண்ணிப் பித்துப்பிடித்தவள் போலானுள். அந் நிலையிலும் அவனைத் தான் எப்படியும் அடைவோம் என்ற தெம்பு மட்டும் அவளிடத்தில் உறுதியாயிருந்தது. ஒரு நாள் அவனது பட்டத்து யானையை அவள் வீட்டு வழியாகக் கொண்டு சென்றனர். உடனே அவன் நினைவு எழக் காதல் வெறியில் அந்த யானையை நோக்கிக் கூறுகிருள்.

வாணர்குல மன்னவன் மதுரைப் பகுதியையே இசைப் புலவனுக்குக் கொடுத்து, அவனையே அப்பதியை ஆளுமாறு வைத்த ஒப்பற்ற தலைவன். அப்படிப்பட்ட கொடை வள்ளல். வாணர்குல மன்னர்களுக்குள்ளே மிகச் சிறந்தவன். அவ்வாணர்களெல்லாம் புகழுகின்ற ஆறை என்ற ஊருக்குரிய

மன்னர் மன்னன் வாணன். அவனுடைய கருமை நிறமுடையஇளமையோடு கூடிய யானையே! மீண்டும் மன்னன் உன்மேல் உலாவரும்பொழுது நீ என் வீட்டருகே வருவாயானால்! நின்னுடைய காலைத் தொழுவேன்! ஆகவே நீ வருக என்கிறாள்.

குறிப்பு:- கேட்பார்க்கு இல்லையென்று கூறாது பொருளை வாரி வாரி வழங்கும் கொடைவள்ளலாகிய மன்னன் தனக்குக் காதல் இன்பத்தை நல்க வில்லையே என அவன் தொடர்புடைய பொருளாகிய யானையை நோக்கிப் பேசுகிறது காதல் உள்ளம்.

புலவர்களுக்கு ஊர்களை மன்னர் வழங்குவதைப் புறநானூறு மிக அழகாகக் கூறுவதைக் காண்க:-

'கடும்பி னடுகல நிறையாக நெடுங்கொடிப்
பூவா வஞ்சியுந் தருகுவ னென்றோ

வண்ண நீவிய வணங்கிறைப் பணைத்தோள்
ஒண்ணுதல் விறலியர் பூவிலை பெறுகென
மாட மதுரையுந் தருகுவன்'

– புறநானூறு: 32. உ. வே. சா. பதிப்பு.

பாணன் – இசைப் புலவன்
பிரான் – தலைவன்
போதகம் – இளமையோடு கூடிய யானை.

கரும் போதகமே! மீண்டும் வரும்போது அகமேவரின், நின் கால் பணிவேன்! எனக் கூட்டுக.

# 14

## மெய் சிலிர்ப்பதேன்!

மதுப்பொழிதார் மன்னவனை
மால்கரிமேற் கண்டு
விதிர்ப்ப மயிருப்ப
மெய்யிற் — புதைத்தாள்
வளவா ரணநெடுங்கை
வண்திவலை வாய்ந்த
இளவாடை கூர்ந்த
தென ! கசு

–வீரசோழியம்: அலங்காரப்படலம்: நூற்பா 27: மேற்.

பெரியோர்கள் முன்னிலையில் எங்குத் தன்காதல் வெளிப்பட்டுவிடுமோ எனக் காதல்உள்ளம் ஏங்குவது இயல்புதானே! நாள்தோறும் மன்னன் உலா வருவது வழக்கம். ஒரு பெண் மன்னனைக் கண்டு காதலுற்றாள். காதல் வளர வளர அவள் உள்ளம் அவனையே நினைந்து நினைந்து ஏங்கியது. ஒரு நாள் மன்னவன் பட்டத்து யானையின்மேல் உலா வந்தான். பெண்ணும் அவள் தோழியும் வீட்டின்முன் நின்று பார்த்தனர். அன்று உலாவில் ஒரு புதுமை. அடிக்கடி ஆங்காங்கு வைத்துள்ள தொட்டி நீரைத் தனது துதிக்கையால் மொண்டு பன்னீர் தெளிப்பதுபோல் தெளித்துக் கொண்டே வந்துகொண்டிருந்தது யானை. உலா இவர்கள் வீட்டிற்கு முன் வந்தது. மிக நன்றாக மன்னனைக்கண்டு களித்தாள் தலைவி. உள்ளக் களிப்பால் மார்பு விம்மிற்று. மேனி நடுங்கிற்று. உடல் மயிர் குத்திட்டு நின்றது. இதனை அவளுக்குத் தெரியாமல் பார்த்தாள் தோழி. உலா வீட்டைக் கடந்து சென்று விட்டது. ஏன் இப்படி மேனி நடுங்கு கிறது உனக்கு எனத் தோழி கேட்க, அதற்குத்

தலைவி- இல்லை. இந்த வாடைக்காற்றால் அப்படி நேர்ந்தது என்று தன் காதலை மறைத்துச் சொல்லி விட்டாள். இவள் மறைத்துக் கூறுவதைக் கேட்டுத் தோழி தனக்குள்ளே சிரித்துக்கொண்டாள். பின் அத் தோழி மற்றொரு தோழியிடம் இதைச்சொல்லுகிறாள்.

இதைக் கேள்! அன்று உலா வந்ததல்லவா! தேனைப் பொழிகின்ற புது மலரால் தொடுக்கப் பெற்ற மாலையை அணிந்தவன் நம் மன்னன். அவனை அன்று பெரிய பட்டத்து யானை மேல் கண்டாள் எங்கள் தலைவி. கண்டவளுக்குத் தன் காதல் தூண்ட களிப் பின் மிகுதியால் மேனி நடுங்கிற்று. உடலில் மயிர் சிலிர்த்தது. உடனே கைகளினால் தன் உடலைக் கட்டிக்கொண்டாள். இந்த வளமை பொருந்திய பட்டத்து யானையின் நெடிய கையினால் பொழிந்த குளிர் நீர்த்துளியோடு கலந்த இளவாடை வீசியத னால்தான் மேனி நடுக்கமும் மயிர் சிலிர்த்தலும் நிகழ்ந் தன எனத்தன் காதல் வெளிப்படா வண்ணம் மறைத் துச் சொன்னாள். எப்படியிருக்கிறது பார்த்தாயா இந்தப் பெண்களது நிலை! என்கிறாள்.

குறிப்பு:- மது – தேன்
விதிர்த்தல் – நடுங்குதல்
வாரணம் – யானை
புதைத்தல் – மறைத்தல்

# 15

## நீர் துளிப்பதேன்!

கல்லுயர்தோட் கிள்ளி
பரிதொழுது கண்பனிசோர்
மெல்லியலார் தோழியர்முன்
வேறென்று—சொல்லுவரால்
பொங்கும் படைபரப்பி
மீதெழுந்த பூந்துகள்சேர்ந்
தெங்கண் கலுழ்ந்தனவால்
என்று! கசு

-வீரசோழியம்: அலங்காரப்படலம்: நூற்பா: 27: மேற்

'பொய் சொன்னாலும் பொருந்தச்சொல்' -என்பது பழமொழி. ஒருமுறைசோழன் உலாவந்தான். அவனைக் கண்டு காதல் கொண்டாள் ஒரு பெண். காதல் முற்றியது. ஒருபொழுது அவனை நினைந்து வாடினாள். மறுபொழுது அவனை நினைந்து மகிழ்ந்தாள். இதைச் செவிலி கண்ணுற்றும் கண்ணுறாதது போலிருந்தாள். ஒருநாள் தலைவியும் தோழியும் செவிலியும் அவள் வீட்டுமுன் வாசலில் நின்றுகொண்டிருந்தனர். அப்பொழுது அவர்கள் வீட்டு வழியாக வெகுவிரைவாகச் சோழமன்னனுடைய குதிரைப்படைகள் சென்றன. சோழனது குதிரைகளைக் கண்டதும் சோழன் நினைவு எழுந்துவிட்டது தலைவிக்கு! காதல் உணர்வு பெருகிற்று. நெஞ்சம் நிறைந்த மகிழ்ச்சியால் கண்களில் நீர் துளிக்க நின்றாள். இதைக் கண்ட தோழி, ஏன் உன் கண்கள் கலங்கியிருக்கின்றன என்று கேட்க அதற்குத் தலைவி, இல்லையே! இந்தக் குதிரைகள் எவ்வளவு விரைவாகச் செல்லுகின்றன பார்த்தாயா! ஒரே தூசியைக் கிளப்பிக்கொண்டு ஓடுகின்றன! அத்தூசிபட்டதால் என் கண்களில் நீர் பெருகிற்று என்று

சாமர்த்தியமாகத் தன் காதலை மறைத்துக் கூறினாள். இதை அடுத்துத் தள்ளியிருந்த செவிலி கேட்டுக் கொண்டு கேட்காததுபோலிருந்தாள். பின் செவிலி மற்றொரு செவிலியிடம் நிகழ்ந்ததைக் கூறி எப்படித் தன் காதலை இப் பெண்கள் மறைத்துப் பேசுகின்றார்கள் பார்த்தாயா! என்று கூறுகின்றாள்.

இதைக்கேள்! மலைபோன்ற வலிமையினையுடைய தோள்களையுடையவன் நம் சோழ மன்னன். அவனுடைய குதிரைகளைக்கண்டு அவன்மேல் கொண்ட காதலால் அக்குதிரையையே தொழத் தொடங்கி விட்டனர் இப் பெண்கள். அது மட்டுமா! காதலால் மகிழ்ச்சி பொங்கக் கண்களில் நீர் பெருகவும் நிற்கின்றனர் இந்த மெல்லியர்கள். ஏன் இப்படிக் கண்களில் நீர் பெறுகிற்று என்று கேட்டார்கள் தோழியர்கள். அதற்கு அவர்களிடம் இந்தப் பெண்கள் சோழனது குதிரைப் படைகள் ஆர்ப்பரித்துக் கொண்டு மகிழ்ச்சி பொங்க வேகமாகச் செல்லுவதால் மேலே பரவலாக எழுகின்ற தூசிகள் கண்களில் படுதலால் எம் கண்கள் நீர்துளிக்கக் கலங்கின என்று தன் காதலை மறைத்து இப்படி வேறொன்றைப் பொருந்தக் கூறுகின்றனரே! எப்படிப் பார்த்தாயா! என்கிறாள்.

குறிப்பு:- காதலுணர்ச்சி கண்வழி இயற்கையில் வெளிப்படுகிறது. ஆனால் தம் நெஞ்சகத் துறைந்த காதல் எங்கே வெளிப்பட்டு விடுமோ என மயங்கி அதனை மறைக்க முயலுகின்றது தலைவியின் காதல் உள்ளம். தன் காதல் வெளிப்படா வண்ணம் மறைத்து வேறொன்றாகச் சொல்லியதால் இதனை அணி நூலார் இலேச அணி என்பர்.

பரி – குதிரை
கலுழ்தல் – அழுதல்
கல் – மலை.

## 16

## கள்வனு! காவலனு!

தவளை உகளும்
    தடம்புனல்நீர் நாடன்
இவளை வளைகரந்தான்
    என்ருல் — தவளத்
தனிக்காவல் வெண்குடையான்
    தண்ணளியு மஃதே
இனிக்காவல் ஆமோ
    எமக்கு ! கரு

– வீரசோழியம்: அலங். நூற்பா 17 மேற்.

காப்பவன் களவாடலாமா? என்பர். ஒரு பெண் சோழனிடத்துக் காதல் கொண்டாள். தன் நெஞ்சை இழந்தாள். உணவு கசந்தது. நாளுக்கு நாள் வாடிஞள். மேனிஅழகு மறைந்தது. உடல் மெலிந்தது. கை வளையல்கள் கழன்று தொலைந்தன. இவற்றைக் கண்ட செவிலியோ பெரிதும் வருந்திஞள். இவளோ சொன்னது கேட்காமல் மன்னனைக் காதலிக்கிருள். மக்களைக் காக்கவேண்டிய மன்னனே இவள் நிலை யறிந்து அருள்புரியவில்லையே! எனத் தனக்குள்ளே கூறிச் செவிலி வருந்திக்கொள்கிருள்.

தவளைகள் துள்ளிக் குதிக்கும் பெரிய நீர்நிலைகளையும் காவிரி பாய்கின்ற நாட்டையுமுடையவன் சோழமன்னன். சிறந்த பாதுகாவலை அளிக்கும் வெண் கொற்றக் குடையையுமுடையவன். அவனே என் மகளுக்குக் காதல் பித்தேற்றி அவள் தன் வளையல்களைக் கவர்ந்தானென்ருல் அவனுடைய அன்பு கனிந்த அருளும் இஃதோதானே! இனி இவ்வுலகில் அவன் நாட்டு மக்களாகிய எங்களுக்கு யார் பாதுகாப்பாவார்! என்கிருள்.

குறிப்பு:- இந்நாட்டு மக்களின் குறையறிந்து, அக் குறை நீக்கி அவர்களை நன்கு பாதுகாப்பதன் அறிகுறியாகத்தான் மன்னர்கள் வெண் கொற்றக் குடையைக் கொள்வது. மக்கள் குறைநீக்கிக் காக்கவேண்டிய வெண் கொற்றக் குடையையுடைய மன்னனே காவானுகில் இவ்வுலகில் யார் காப்பாவார் எமக்கு என ஏங்குகிறது செவிலியின் உள்ளம். இதிலிருந்து தலைவியின் காதல் நெஞ்சத் துடிப்புப் புலனுகின்றது.

உகள்தல் – துள்ளிக் குதித்தல்
தடம்புனல் – பெரிய நீர்நிலை
நீர்நாடன் – சோழன்
கரத்தல் – கவர்தல்
தவளம் – வெண்மை
அளி – அருள்

## 17

### ஐயந்தெளிதல்!

நறவேந்து கோதை
நலங்கவர்ந்து நல்கா
மறவேந்தன் வஞ்சியா
னல்லன் — துறையின்
விலங்காமை நின்று
வியன்தமிழ்நா டைந்தின்
குலங்காவல் கொண்டொழுகும்
கோ! கசு

தண்டி: நூற்பா: 75: மேற்

வாழ்க்கையில் ஐயுறவு என்பது எல்லோருக்கும் பொதுவானது. அதிலும் காதல் வழிப்பட்டவர்களுக்குக் கேட்கவே வேண்டுவதில்லை! ஒருபக்கம் காதல்துன்பம். அது நிறைவேறுமா? நிறைவேருதா? என்ற ஐயுறவு மறுபக்கம். ஒருநாள் சேரன் உலா வந்தான். ஒரு பெண் அவனைப்பார்த்தாள். மன்னனும் அவள் பக்கம் லேசாகத்திரும்பினுன். அவ்வளவுதான்பெண் மன்னன் மேல் காதல் கொண்டாள். காதல் முற்றியது. உணவு கொள்ளவில்லை. வாடினுள். அழகிழந்து காணப் பட்டாள். இந்த நிலையில் அவன் வருவானே! வர மாட்டானே! என்ற ஐயுறவு வேறு எழுந்துவிட்டது. பார்த்த அவன் இன்னும் நம்மை நாடி வரவில்லையே! ஒருவாறு மன்னன் வராவிட்டால் நம்நிலை என்னுவது! என்று கவலையோடு தலைவி தோழியிடம் தெரிவித்தாள். அதற்குத் தோழி, நீ மனத்தை அலையவிடாதே; கண்டிப்பாய் மன்னன் வருவான் என்று சொல்லி அவளைத் தேற்றினுள். பின் தோழிக்கே ஐயுறவு எழுந்துவிட்டது. தோழி தனித்திருந்து தன் நெஞ்சொடு சொல்லிக்கொள்கிருள்.

ஆமா! அவள் கேட்டதற்குத் தைரியமாகப் பதில் சொல்லி அவளைத் தேற்றிவிட்டோமே! ஒருவேளை மன்னன் வராவிட்டால்! என் செய்வது! ஐயோ! மேலும் இம்மன்னன் வஞ்சி என்ற ஊருக்குத் தலைவ னல்லவா! இவள் கதி! அப்படியெல்லாம் ஒன்று மில்லை! தேனை ஏந்தியிருக்கும் மலர் மாலையை அணிந்த இப் பெண்ணினது நலத்தைக் கவர்ந்தான்; பின் அவளைக்கூடி அந் நலத்தைத் திரும்பத்தரவில்லை. பறித்துச்செல்வதுதான் வீரமோ! பெரிய வீரமிக்க வேந்தன் தான். அப்படியெல்லாம் வாராது வஞ்சித்து விடமாட்டான். ஊர்தான் வஞ்சியேதவிர அவன் இயல்பு அப்படியில்லை. நல்லவன். ஏனென்ருல் ஒழுக்கத் துறையினின்றும் வழுவாதவன். நடுநிலையில் நின்று பரந்த தமிழ்நாடு ஐந்தினையும் முறைப்படி

காத்து ஆட்சிநெறி ஒழுகும் வேந்தனல்லவா! ஆகவே நெறி பிறழ்ந்து அப்படியெல்லாம் போக மாட்டான்! என்று தனக்குள் சமாதானம் கூறிக் கொள்கிருள்.

குறிப்பு:- நறவேந்து கோதை—தேனை ஏந்தியிருக்கும் மலர் மாலையை அணிந்த பெண்.

வஞ்சியான் + நல்லன் — வஞ்சியானல்லன்— வஞ்சித்து விடமாட்டான். ஊர்தான் வஞ்சியே தவிர அவன் இயல்பு அப்படியல்ல; நல்லவன்.

மன்னன்பால் தலைவி கொண்ட காதல் நிலையையும், அவன் வாரானே என்று எழுந்த தோழியின் ஐயுறவிற்குப் பின் அவளே கொண்ட தேறுதல் நிலையையும் சித்தரிக்கிறது இக் கவிதை.

தோழியின் உள்ளத்தே, வஞ்சி என்ற பதிக்குரிய (வஞ்சியான்) மன்னன் தன் தலைவியின் நலங்கவர்ந்தான்: ஆதலால் வருவானே! வாரானே! என்ற ஐயம் எழுந்தது. பின்னர்த் தனக்குள் மன்னன் நெறி பிறழாது நின்று தமிழ்நாடு ஐந்திணையும் காவல் கொண்டு ஒழுகுவதனுல் நல்லவனே என்ற கருத்துத் தோன்றி முன் எழுந்த ஐயத்தை மறுத்துக்கொள்வதால் இதனை இலக்கண நூலார் அவநுதியணி என்பர்.

## 18

## அறநெறியும் அரசும்

நறைகமழ்தார் வேட்டார்
 நலனணியும் நாணும்
நிறையும் நிலேதளரா
 நீர்மை—அறநெறிசூழ்
செங்கோல னல்லன்
 கொடுங்கோலன் தெவ்வடுபோர்
வெங்கோப மால்யானை
 வேந்து! கள

– தண்டி: நூற்பா: 75: மேற்.

மக்களுக்குத் துன்பம் எதுவும் நேராமல் பாது காப்பதுதானே மன்னன் கடமை. அதுதானே செங் கோலேயுடைய மன்னர்களுக்கு அழகு! ஒரு நாள் மன்னன் மாலேயணிந்து யானேமேல் உலா வந்தான். ஒரு பெண் மன்னனேக்கண்டு காதலுற்ருள். காதல் வளர்ந்தது. வாடினுள். பெரிதும் துன்புற்ருள். உடல் நலமிழந்தாள். இந்த நிலேயில் ஒரு நாள் மன்னனது செங்கோலின் சிறப்புப்பற்றிப் பக்கத்து விட்டார் பேசிக்கொண்டிருந்தனர். இதைக் கேட்டாள் தலேவி. வருத்த நிலேயில் இவளுக்கு எரிச்சல் வந்துவிட்டது. மன்னனேக் கொடுங்கோலன் என்றல்லவா சொல்ல வேண்டும்; செங்கோலன் என்கிருர்களே இவர்கள் என்று தனக்குள்வெறுப்புடன் சொல்லிக்கொள்கிருள்.

போர்க்களத்தின்கண்ணே பகைவர்களேக் கொடிய சினத்தோடு தாக்கிக்கொல்லுந் தன்மைவாய்ந்த பெரிய யானேப் படையுடையவன் வேந்தன். மணங்கமழும் மாலேயை அணிந்தவன். அவனேக்கண்டு காதல் கொண்ட பெண்களது நலன்-அழகு—நாணம்—நிறை

முதலியவற்றின் நிலை தளராமல் காக்கும் சிறந்த குணத்தோடு இவ்வுலகை அறநெறி வழுவாமல் காப்பவன்தானே செங்கோலையுடையவன்! அவன் அப்படிக் காக்க வில்லையே! ஆகவே இவன் செங் கோலன் அல்லன்; கொடுங்கோலன், ஆமாம்! என்கிருள்.

குறிப்பு:- அவள் மன்னன்மேல் காதல்கொண்டு அக் காதலால் வாடும் வாட்டம், மன்னன் செங் கோலனல்லன்; கொடுங்கோலன்என்றுகூறும் வெறுப்புரை மூலம் வெளிப்படுகிறது. இக் கவிதையில் உண்மையை மறுத்துப் பிறி தொன்ருகத் தலைவி கூறுவதால் இதனை அணிநூலார் அவநுதியணி என்பர்.

நறை—மணம்
அணி—அழகு
நீர்மை—சிறந்தகுணம்
அடுதல்—கொல்லுதல்
தெவ்—பகைவர்; (ஆகுபெயர்)
நிறை—உள்ளத்தைப் புறத்தேவிடாது
ஒருவழி நிறுத்தும் திட்பம்.

ஒப்புமை: வரைபொரு நீள்மார்பின்
வட்கார் வணக்கும்
நிரைபொரு வேன்மாந்தைக்
கோவே!—நிரைவளையார்
தங்கோலம் வவ்வுதல்
ஆமோ அவர்தாய்மார்
செங்கோலன் அல்லன்
என!

–முத்தொள்ளாயிரம்; பா. 5.

# 19

## கண்ணும் கதவும்

வாடை குளிர
　　மருந்தறிவார் இல்லையோ
கூட இனியொருகாற்
　　கூடாதோ! —ஓடை
மதவா ரணத்துதயன்
　　வத்தவர்கோன் நாட்டிற்
கதவான தோதமியேன்
　　கண்! கஅ

—பெருந்தொகை; பா எண்: 696.

'காதல் சக்தியே! உன் நினைவுகள் சிறந்த வேதனையின் ஆழத்திலிருந்து தத்தளித்துக் கொப்பளித்து வருகின்றனவே!' —என்கிறார் ஓரிடத்தில் கவிஞர் கீட்ஸ் என்பார். ஒரு பெண் வத்தவர் நாட்டு மன்னனை உதயனைக்கண்டு காதலுற்றாள். அவன் நினைவாகவே இருந்தாள். கனவிலெல்லாம் அவனையே தழுவுவதாகக் கண்டாள். காதல் பெருக வாடினாள். வருந்தினாள். உணவு செல்லவில்லை. உறக்கம் கொள்ளவில்லை. எத்துணையோ இரவுகள் காதல் நினைவு வருத்தத் தூங்காது தத்தளித்தாள். அன்று பனிக்கால இரவு. ஊர் அமைதியில் ஆழ்ந்திருந்தது. இவளோ தூங்கவில்லை. நனவில் தான் அவனைக் காணமுடியவில்லை. கனவிலாவது அவனைக் காணலாமென்றால் இந்தப் பாழுங்கண்கள் தூங்கவா செய்கின்றன என்று ஏங்குகிறாள். அந்த ஏக்கத்தோடு தனக்குள்ளே சொல்லிக்கொள்கிறாள்.

என்ன வாடை! இது வேறு வெப்பத்தை ஈந்து நம்மைக் கொல்லுகிறதே! இந்த வாடையைத்தான் ஒன்றும் செய்யமுடியாது! இது நம்மை வருத்தாமல்

இனிதாகக் குளிர மருந்து அறிந்தவர்கள் ஒருவர்கூட இல்லையோ! ஐயோ! இந்தக் கண்கள் ஏன் இப்படி விழித்துக்கொண்டிருக்கின்றன. அவனைக் கனவிலாவது கூடுவதற்கு இந்தக்கண்கள் இனி ஒருதரங்கூட இமை பொருந்தாதோ! நெற்றிப்பட்டத்தை அணிந்து மதம் பொழியும் பட்டத்து யானையையுடையவன் இந்த உதயமன்னன். அவன் வத்தவர் நாட்டிற்குத் தலைவனாகவுமிருக்கிறான். என்னுடைய கண், அல்லும் பகலும் எப்பொழுதும் திறந்துகிடக்கும் அவனுடைய நாட்டுக் கதவுபோலல்லவா ஆகிவிட்டது! என்கிறாள்.

குறிப்பு:- காதல் நினைவு எழுந்து வருத்தத் தூங்காத தன் கண்களுக்கு, முறைப்படி ஆட்சிசெலுத்துவதனால் அல்லும் பகலும் திறந்து கிடக்கும் வத்தவ நாட்டுக் கதவுகளை உவமை கூறுகிறாள் தலைவி.

தன் காதலனை நினைந்து கண் உறக்கம் கொள்ளவில்லை யென்ற குறிப்பும், அவன் யாவரும் போற்றக்கூடிய ஆட்சி செலுத்தியதனாலும், அருள் உள்ளம் படைத்தவனாதலாலும், வெளிநாட்டுத் தூதுவர்களும் புலவர்களும் வறிஞர்களும் எப்பொழுதும் வெளியிலிருந்து வந்துகொண்டே யிருப்பதாலும், கள்வரின்மையாலும் அவன் நாட்டுக் கதவுகள் அடையா நெடுங்கதவாயின என்ற குறிப்பும், காணக்கிடக்கிறது கவிதையில்!

இக்கவிதை வச்சத்தொள்ளாயிரம் என்ற நூலில் உள்ள ஒரு பாடல் என்று பெருந்தொகை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

உதயன் — வத்தவர் நாட்டின் மன்னன் வத்தன் - வத்ததன் - வச்சன் என்று பெயர்கள் அவனுக்கு வழங்குகின்றன.

ஓடை—யானை நெற்றிப்பட்டயம்,
வாரணம்—யானை.
வாடை—வடக்கிலிருந்து வீசும் காற்றுக்கு வாடையெனப் பெயர்.

வச்சத்தொள்ளாயிரம்: வத்தவர் நாட்டினனாகிய உதயணன்மேல் இயற்றிய நூல், தொள்ளாயிரம் வெண்பாக்களையுடையது. இந்நூல் முழுவதும் இப்பொழுது கிடைக்கவில்லை. ஏதோ ஓரிரண்டு பாடல்கள் மட்டும் கிடைத்துள்ளன.

## 20

## கரும்பும் வேம்பும்

தென்னவா! மீனவா!
 சேலமாரு!மதுரை
பன்னவா! பாண்டி
 வராமா! —முன்னம்
கரும்புக்குத் தாரளித்த
 தூயதமிழ் நாடா!
கரும்புக்கு வேம்பிலே
 கண்! கசு

—தமிழ் நாவலர் சரிதம்: பா. எண். 182·

பாண்டிய மன்னன் போர்புரிவதில் பேராற்றல் படைத்தவன், அவன் சென்ற ஊரெல்லாம் குறுநில மன்னர்களும் மற்றவர்களும் வரவேற்று மாலை அணிவிப்பர். ஆகவே எப்பொழுதும் மாலைதவழும் மார்பினனாகவே திகழ்ந்தான். ஒரு நாள் அவன் உலாவந்தான். மன்னனைக்கண்டு காதலுற்றாள் ஒரு பெண்,வாடினாள். வருந்தினாள். உணவு செல்லவில்லை. இந்த நிலையைக் கண்ட தோழி தனித்திருந்து பாண்டிய மன்னனை முன்னிலைப்படுத்தித் தனக்குள்ளே சொல்லிக்கொள்கிறாள்,

தென்னவனே! மீனக்கொடியுடையவனே! சீவல மாறு! மதுரைக்கு மன்னவா! பாண்டி வரராமா! வண்டுகள் தன்னை நாடிவந்தால் தேன் கிடைக்க வேண்டுமே என்று எண்ணி அதன் குறிப்பறிந்து வண்டுக்குத் தேன் நிறை புது மாலையை அளிக்கும் தூய தமிழ்நாட்டுத் தலைவா! கரும்பு போன்ற மொழி யாளாகிய இப் பெண் உன்னுடைய வேப்பமலர் மாலையிலே கண் வைத்துக் காதலாகி வாடுகிருள். நீயருள்க! என்கிருள்,

குறிப்பு:- தேன் நிறை தன் மாலையை வண்டுக்கு அளித்தபாண்டியன், அவன்மேல் காதலால் வாடும் தம் பெண்ணுக்கு நல்கவில்லையே என ஏங்குகிறது தோழியின் உள்ளம்.

'கரும்புக்கு வேம்பிலே கண்'-என்ற ஈற்றடி எண்ணி எண்ணி மகிழத்தக்கதொன்று·

வேம்பு-வேப்பமாலை; பாண்டியனுக்கு உரிய மாலை.

மீனவன்–மீனக்கொடியையுடையவன்.

'மீனக் கொடிபாடும் பாடலே பாடல்
வேப்பந்தார் நெஞ்சுணக்கும்பாடலேபாடல்'

என்பது சிலப்பதிகாரம்: வஞ்சி: வாழ்த்துக்காதை 27·

# 21

## கனவும் நினைவும்

முற்பற்றி றை
முறைசெய்யின் தானென்னைக்
கைப்பற்றக் கண்டேன்
கனவினுள்—இப்பெற்றித்
தன்னைத் தனக்கே
முறைப்படின் என்செய்யும்
பொன்னம் புனல்நாட்டார்
கோ! ௨0

–தொல் பொருள் நச்சி: நூற்பா: 86 மேற்.

ஒருபெரிய அறை. அதனுள் நாம் ஒலியெழுப்புவோ மேயானல் அவ்வொலி அப்படியே எதிரொலியாகக் கேட்கக் காணுகின்ருேம். அதுபோல நம் உள்ளத்தில் எந்தவித எண்ணங்கள் எழுகின்றனவோ அவைதாம் அப்படியே உணர்ச்சியாக வெளியாகின்றன. ஆக ஒலியும் எதிரொலியும்போல உள்ளமும் உணர்ச்சியும் அமைந்திருப்பதைக் காண்கின்ருேம். ஒரு பெண் சோழனிடத்துக்காதல்கொண்டாள். காதல் முற்றியது. எப்பொழுதும் அவன் நினைவாகவேயிருந்தாள். எவ்வேலை செய்யப் புகினும் உள்ளம் அவனையே நினைத்தது. பித்துப்பிடித்த உணர்ச்சி வயப்பட்டவள் போல் காணப்பட்டாள். இருப்பினும் அவள் அக உள்ளத்தில், எப்படியும் நான் மன்னனை அடைந்து திருமணம் செய்துகொள்வேன் என்ற தன்னம்பிக்கை யோடுகூடிய அழுத்தமான எண்ணம் உறைந்திருந்தது. நாட்கள் சென்றன. ஒருநாள் இரவு எப்படியோ தூங்கினுள். கனவுகண்டாள். அவள் எண்ணங்களின் எதிரொலியாகச் சோழன்வந்தான். அவன், இதுவரை

யாரும் தொடாத தன் கையைப் பிடித்ததுபோலவும், நான் உன்னை மணம் செய்துகொள்ளுகிறேன் என்று சொல்லித் தன்னை அணைத்துக்கொண்டது போலவும் கனவு கண்டாள். ஏதோ ஒலி எழ விழித்துக் கொண்டாள். மறுநாள் தனித்திருந்து தன் நெஞ்சொடு சொல்லிக்கொள்கிறாள்.

பொதுவாகக் கன்னிப்பெண்களின் கையை யார் முதலில் பற்றுகிறார்களோ அவர்கள்தானே அப் பெண்ணை மணந்துகொள்ளவேண்டும். அதுதானே வழக்கம்–முறை–நீதியெல்லாம்! செல்வம் கொழிக்கும் காவிரிப் புனல்பாயும் நாட்டையுடைய மன்னன் சோழன். அவன் வந்து முதன்முதலில் என் கையைப் பற்ற நான் கனவு கண்டேன். ஆகவே என் கையை முதன்முதலில் கைப்பிடித்தவன் அவன்தானே! அவன் தானே என்னை நீதிமுறைப்படி மணக்கவேண்டும். மேலும் இந்தத்தன்மையோடு மக்கள் குறையறிந்து அதனை நீக்கி நீதிமுறை வழுவாது ஆட்சி புரிகிறான் சோழன் என்றெல்லாம் மக்கள் சொல்லுகிறார்களே! அந்தச் சோழனுக்கே இப்படி நேர்ந்திருக்கிறது. ஆகவே அவன் நீதிமுறைப்படி என்னை என்னசெய்ய வேண்டும்! பேசாமல் திருமணம் செய்துகொள்ள வேண்டியதுதானே! என்கிறாள்.

குறிப்பு:- முதன்முதல் எவனொருவன் பெண்ணின் கையைப் பிடிக்கிறானோ அவனே திருமணம் செய்துகொள்ளுதற்கு உரியவன் என்பது வழக்கம். அவ்வழக்கப்படி தான் கன்னிப் பெண் என்றும், சோழன் முதன்முதலில் தன் கையைப் பற்றினன் என்றும், இவன் நீதி வழுவாதவன் என்றும் இவனே நிகழ்ச்சியின் தலைவன் என்றும் எண்ணிச் சோழனே திருமணம் செய்துகொள்ளவேண்டுமென்று ஏங்குகிறது காதல் உள்ளம்,

முற்பற்றுதல் - முதன் முதல் எல்லோர்க்கும் முன்வந்து கையைப்பற்றுதல்
முறை - நீதி, வழக்கம்.
இப்பெற்றி - இந்தத் தன்மை.
புனல் நாடு - சோழநாடு
பொன் - செல்வம்

## 22

## நறுமாலேயும் செறுமாலேயும்

ஆழி இழைப்பப்
பகல்போம் இரவுவரின்
தோழி துணையாத்
துயர்தீரும் — வாழி
நறுமாலே தாராய்!
திரையவோஓ என்னும்
செறுமாலே சென்றடையும்
போழ்து! உக

-பொய்கையார்: யாப்பருங்கலவிருத்தி: நூற்பா 4: மேற்

தொண்டை நாட்டு மன்னன் இளந்திரையனைக் கண்டாள் ஒரு பெண். அவனைக்கண்டு காதலுற்ருள். காதலால் வாடினுள். ஒவ்வொரு விநாடிப்பொழுதையும் அவன் நினைவாகவே கழித்தாள். அதிலும் மாலைப் பொழுது அவளைப் பெரிதும் துன்புறுத்திற்று. இந்த நிலையில் அவள் தனக்குள்ளே சொல்லிக்கொள்கிருள்.

மன்னு! இளந்திரையனே! நான் உன்னை அடைவேனு! இல்லை அடையாது போவேனு என்று ஆழி இழைத்துப்பார்ப்பேன். இப்படி இழைத்து இழைத்துப் பார்ப்பதனுல் ஒருவாருகப் பகற் பொழுது போய்

விடுகிறது. இரவு வந்துவிட்டால் தூக்கமே வருவதில்லை. இருந்தாலும் இரவு முழுவதும் உன்னைப் பற்றியே தோழியுடன் பேசுவேன். அவ்விரவுப் பொழுதும் ஒருவாறு தோழியின் துணையினுல் கழிந்துவிடுகிறது. ஆனுல் வருத்துகின்ற இந்த மாலைப்பொழுது இருக்கின்றதே! அப்பப்ப! அந்தப் பொழுதானது தன் முடிவை நெருங்கி அடையும் பொழுதுதான் நான் பெரிதும் வேதனையடைகிறேன். நீ நன்ருயிருப்பாயாக! நீடூழி வாழ்வாயாக! உன்னுடைய நல்ல மணமலர்மாலையை எனக்குத் தந்து என்னைக் காப்பாயாக! என்று தலைவி கூறிக் கொள்கிருள் என்கிருர் கவிஞர்.

குறிப்பு:- காதல் நோயானது காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலை மலருகின்றது என்று கூறுவர் திருவள்ளுவர். ஈண்டுக் காலைப் பொழுதும் இரவுப்பொழுதும் முறையே ஆழி இழைத்தலும் தோழி துணையாதலுமாகச் செல்ல மாலைப்பொழுதில் காதல் நோயால் மிக வாடுகிற தலைவியின் காதல் உள்ளத்தைக் காட்டுகிறது கவிதை.

ஆழி இழைத்தல் – தன்முன் மணலைப்பரப்பி, கண்களை மூடிக்கொண்டு, அதில் கைவிரலால் ஓரிடத்தில் சுழிக்கத்தொடங்கிச் சுழிகழியாகப் போட்டுக்கொண்டு வட்டமாகச் சுழிக்க வேண்டும். இச்சுழிகள் முன் தொடங்கியவற்றுடன் கூடிமுடியவேண்டும், பொருந்தக் கூடினுல் வெற்றி, கூடாது தவறினுல் தோல்வி. இதனைச் சுழிக்குறி என்பர்.

செறுமாலை-வருத்தும் மாலைப்பொழுது. தலைவன் பிரிந்தவிடத்து மாலைப்பொழுது தலைவியைப் பெரிதும் துன்புறுத்தும் என்பதனை;

'காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து
ஏதிலர் போல வரும்!' என்ற
இத்திருக்குறளால் (1224) அறியலாம்.

## 23

### முயன்றால் முடியாதோ!

தண்துறைநீர் நின்ற
தவத்தால் அளிமருவு
புண்டரிக நின்வதனம்
போன்றதால்—உண்டோ
பயின்றோர் உளம்பருகும்
பான்மொழியாய்! பார்மேல்
முயன்றால் முடியாப்
பொருள்! உ௪

—தண்டி ; நூற்பா 89: மேற்

முயற்சியுடையார் இகழ்ச்சியடையார் என்பர். தலைவன் ஒருவனைக்கண்டாள் தலைவி. காதல் கொண்டாள். வாடினாள். உணவு செல்லவில்லை. பலநாள் துன்பப்பட்டாள். எப்படியும் அவனை அடைந்துவிடுவது என்று உறுதி செய்துகொண் டாள். தான் முன்னர் அவனைக் கண்ட இடத்தருகே காணக் கருதி அவன் இப்பக்கம் வாரானோ என ஏங்கிக்காத்திருப்பாள். ஒரு நாள் அவள் எதிர் பார்த்தபடி வந்தான் தலைவன். உளமாரக் காதல் மொழி பேசினாள் அவனோடு. பின் அவன் சென்று விட்டான். முன்பு வாடியிருந்த அவள் முகம் அவனைக் கண்டமகிழ்ச்சியால் தாமரைமலரைப்போன்று மலர்ச்சி பெற்றிருந்தது. மகிழ்ச்சி பொங்கத் தன் தோழியோடு நீர் நிறைந்த தடாகம் ஒன்றிற்குச் சென்று பேசிக் கொண்டிருந்தாள். அந்த நீர் நிலையில் செந்தாமரை மலர்கள் அழகுற மலர்ந்து மணம் வீசிக்கொண்டிருந்

தன. தலைவி மகிழ்ச்சியோடு அவைகளைப் பார்த்துக் கொண்டேயிருந்தாள், இவை எல்லாவற்றையும் அறிந்த தோழி தலைவியிடம் சொல்லுகிறாள்.

காதலர் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் பாலை யொத்த மொழியினையுடைய தலைவியே! இதோபார்! இந்தக் குளிர்ந்த துறையில் உள்ள நீர் நிலையிலே எப்பொழுதும்தன் ஒற்றைக்காலால் நின்று தவம்புரிந்த தினால் வண்டு மருவும் இந்தத்தாமரை நின்னுடைய முகத்தை ஒப்ப அழகினைப்பெற்றது. ஆதலால் இவ்வுல கில் மன உறுதியோடு முயற்சி செய்தால் அடைய முடியாத பொருள் உண்டோ! இல்லை! என்கிறாள்.

குறிப்பு:- நீர் நிலையில் செந்தாமரை பூத்திருக்கிறது. மலர் தண்டைப் பெற்றிருத்தல் இயற்கை. அது தண்டாகிய காலால் நின்று தவமிருந்து தலைவியின் முக அழகினைப்பெற்றது என்று தோழி கூறுவதன் மூலம் வாடிவருந்திய தலைவி தன்முயற்சியால் தலைவனை அடைந்த தையும், அடைந்ததால் அவள் பெற்ற மகிழ் வின் மலர்ச்சியினையும் இக்கவிதை புலப் படுத்துகிறது.

அளி – வண்டு
புண்டரிகம் – தாமரை.

ஒப்புமை:-

கார்நறு நீலங்
கடிக்கயத்து வைகலும்
நீர்நிலை நின்ற
தவங்கொலோ—கூர்நுனைவேல்
வண்டிருக்க நக்கதார்
வாமான் வழுதியாற்
கொண்டிருக்கப் பெற்ற
குணம்!

- முத்தொள்ளாயிரம்: பா. எண்: 65.

## 24

### குணமாமோ!

சீதார விந்தபுயன்
தென்னவன்தன் திண்சிலம்பில்
போதாலும் கண்ணாலும்
போர்செய்வோர்க் — கோது
கொடியிடையார் தம்மால்
குணமாமோ! இந்தத்
துடியிடையார் கொண்ட
துயர்! ௨௩

- ஒப்பிலாமணிப்புலவர்: தனிப்பாடல் திரட்டு
முதல் பாகம்: (கா. சு. பிள்ளை) பக் 194

உள்ளம் வாட்டமடையுமானால் உடலும் வாட்ட மடையக் காணுகின்றோம். ஒருமுறை பாண்டியன் அவனுடைய மலையூர்களில் வந்து தங்கியிருந்தான். அப்பொழுது அவனைக் கண்டு பெண்கள் பலர் காதல் கொண்டனர். காதல் முற்றி அப்பெண்கள் உடல் மெலிந்தனர். படுத்தபடுக்கையாயினர். இந்த நிலையில் அவர்கள் தாயர்கள் மருத்துவரைக் கூட்டிவந்து மருந்து கொடுக்கச்செய்தனர். அதிலும் பயனில்லை. பக்கத்திலுள்ள வயது முதிர்ந்தவர்கள் இப்பெண் களுக்கு வந்தநோய் தெய்வக்குறையால் வந்தது என்றனர். அதற்கு முருகனுக்கு வெறிக்களம்அமைத்து வெறியாட்டெடுத்து வெள்ளாட்டைப் பலிகொடுக்க வேண்டும்; குறை நீங்கும் என்றனர். உடனே அப் பெண்களின் தாயர்கூடி அவ்வாறே செய்யத் தலைப் பட்டனர். இதனையறிந்த பெண்களின் தோழியர்கள் ஒன்றுகூடினர். ஒருதோழி மற்றொரு தோழிபால் இத் தாயர்தம் அறியாமையைக்கூறி நகைக்கிறாள்.

இதோ பார்! குளிர்ச்சி பொருந்திய தாமரையில் வீற்றிருக்குங் வெற்றித் திருமகளைத் தன் தோள் களிலே பெற்றவன் நம் மதிப்பிற்குரிய பாண்டிய மன்னன். அவனுடைய இந்த மலையில் அவன்மேல் காதல்கொண்டனர் இந்தப் பெண்கள். அக்காத லினல்பெரிதும் துன்புறுகின்றனர். உடுக்கை போன்ற இடையையுடைய இந்தப் பெண்கள். மலராலும் கண்ணாலும் போர் செய்ய வல்ல மன்மதனுக்கும் சிவ பெருமானுக்கும் சொல்லப்படுகின்ற கொடிகளாகிய மீனத்துக்கும் இடபத்துக்கும் இடையேயுள்ள மேடத்தை (ஆட்டினை) முருகனுக்குப் பலியிடுவதனல் இவர்கள் கொண்ட துன்ப நோய் எங்காவது குணம் ஆகுமா! குணமாகாது என்று கூறி நகைக்கிருள்.

குறிப்பு:- மீனத்துக்கும் இடபத்துக்கும் இடைப்பட் பட்டது மேஷம் என்று சோதிடவல்லார் கூறுவர். மேஷம் என்பது ஆடு. ஆகவே இடைப்பட்ட ஆட்டினைப் பலிகொடுப்பதனல் காதல் நோய் குணமாமோ எனத் தாயர்தம் அறியாமையை வியந்து நகைக்கின்றனர் தோழியர்கள். இத் துறையை வெறிவிலக்கல் என்பர். முருகனுக்கு வெறியாட்டெடுத்து வெள்ளாட்டைப் பலியிடுதல் பண்டைய மரபு.

சீதம் –குளிர்ச்சி

அரவிந்தம் –தாமரை

தென்னவன் –பாண்டியன்

போதாலும் கண்ணாலும் போர் செய்வோர்-மல ரால் போர் செய்யவன் மன்மதன்; நெற்றிக் கண்ணால் போர் செய்யவல்லவர் சிவபெருமான்.

கொடி-மன்மதனது கொடி மீனம்; சிவனது கொடி இடபம்.

**ஒப்புமை:-**

காராட் டுதிரம்தூஉய்
அன்னை களன்இழைத்து
நீராட்டி நீங்கென்றால்
நீங்குமோ!—போராட்டு
வென்று களங்கொண்ட
வெஞ்சினவேற் கோதைக்கென்
நெஞ்சங் களங்கொண்ட
நோய்!

–முத்தொள்ளாயிரம்: பா. எண். 11,

அணங்குடை நெடுவரை யுச்சியின் இழிதரும்
கணங்கொள் அருவிக் கான்கெழு நாடன்
மணங்கமழ் வியன்மார்பு அணங்கிய செல்லல்
இதுவென அறியா மறுவரற் பொழுதில்
படியோர்த் தேய்த்த பல்புகளத் தடக்கை
நெடுவேட் பேணத் தணிகுவள் இவளென
முதுவாய்ப் பெண்டிர் அதுவாய் கூறக்
களநன் கிழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்து
உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்
ஆரநாற அருவிடர்த் ததைந்த
சாரற் பல்பூ வண்டுபடச் சூடிக்
களிற்றிரை தெரீஇய பார்வல் ஒதுக்கின்
ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல
நன்மனை நெடுநகர்க் காவலர் அறியாமைத்
தன்னசை உள்ள நந்நசை வாய்ப்ப
இன்னுயிர்குழைய முயங்குதொறும் மெய்ம்மலிந்து
நக்கனென் அல்லனோ யானே எய்த்த

நோய்தணி காதலர் வரவீண்டு
ஏதில் வேலற்கு உலந்தமை கண்டே!

–வெறிபாடிய காமக்கண்ணியார்;
அகம்: களிற்றியானை நிரை: குறிஞ்சி; பா. எண். 22.

## 25

## தனிமை பொறுக்குமோ!

சிலைவிலங்கு நீள்புருவம்
சென்றேசிய நோக்கி
முலைவிலங்கிற் றென்று
முனிவாள்—மலைவிலங்கு
தார்மாலை மார்ப
தனிமை பொறுக்குமோ
கார்மாலை கண்கூடும்
போது! உ௪

- தண்டி நூற்பா: 16 மேற்

'புனர்தலின் ஊடல் இனிது' —என்பார் திருவள்ளுவர். ஆகவே எத்தகைய சிறந்த இன்பப் புணர்ச்சிக்கும் ஊடல் இன்றியமையாததல்லவா! தலைவி ஒருத்தி தலைவன் ஒருவன்பால் காதல் கொண்டாள். காதல் கனிந்தது. இருவர் உள்ளமும் ஒன்றின. அவளன்றித் தானில்லை என்று அவள் உள்ளம் எண்ணிற்று. அவரைச் சிறிது காணவில்லை என்றாலும் அப்பிரிவை நினைந்து அவள் உள்ளம் அஞ்சி வருந்தும். இப்படியாக இருவரும் இன்பப் புணர்ச்சியில் திளைத்தனர். ஒருநாள் தலைவன் தோழியைப் பார்த்து நான் சிறிது நாட்கள் பொருள் காரணமாக வெளியூர் செல்ல வேண்டிவரும் என்று மட்டும் தெரிவித்தான். அதற்குத் தலைவியின் உயிர்த் தோழி தலைவனிடம் கூறுகிறாள்.

மலையினைப் போன்று பரந்த மார்பில் ஒழுங்காகத் தொடுக்கப் பெற்ற மாலையினை அணிந்த தலைவ! நீ அவளைத் தழுவ, அவள் உன்னைத் தழுவ இருவரும் இன்பப் புணர்ச்சி செய்யுங்காலத்து உன் கைப்பிடி கொஞ்சம் நெகிழ உன்மேல் குத்திட்டு நின்ற அவள் மார்புவிலகவும் அதனால்உங்கள் இருவரிடையேஉள்ள நெருக்கம் குறைதலைப் பொறுக்கமாட்டாள். சினத்தால் அவளுடைய நீண்ட புருவமானது வில்லைப் போன்று வளைந்து மேலே செல்ல, சாய்ந்து நோக்கி ஊடி நிற்பாள். முலை கொஞ்சம் விலகியதற்கே இந்த நிலை யென்றால் நீ அவளைப் பிரிந்து சென்றுவிட்டாயே யானால் இருள்கூடிச் சேரும் மாலைப் பொழுதில் தனிமையில் நிகழும் துன்பத்தை அவள் பொறுக்கக் கூடியவளோ! நீயே சொல்! என்றாள்.

குறிப்பு:- ஒருபொழுதுகூடத் தலைவனைப் பிரியச் சம்மதியாத தலைவியின் உள்ளக் கருத்தைப் புலப்படுத்தும் தோழியின் திறமையும் புணர்ப்பில்முலை விலகஊடும் காதற்பண்பை யும் சுவையூறக்காட்டி நிற்கிறது கவிதை.

| | |
|---|---|
| சிலை | –வில் |
| ஓசிதல் | –சாய்தல் |
| விலங்குதல் | –வளைதல் |
| தார் | –ஒழுங்கு |
| விலங்கிற்று: | –மெலித்தல் விகாரம் |

ஒப்புமை:

தழுவும் கொழுநர் பிழைநலியத்
தழுவேல் என்னத் தழுவியகை
வழுவ உடனே மயங்கிடுவீர்
மணிப்பொற் கபாடம் திறமினோ!

கலிங்கத்துப்பரணி; கடை திறப்பு: பா. எண் 44

# 26

## காதலன் செய்கை!

ஆடல் மயிலியலி
யன்பன் அனியாகம்
கூடுங்கால் மெல்லென்
குறிப்பறியான்—ஊடல்
இளிவந்த செய்கை
இரவாளன் யாண்டும்
விளிவந்த வேட்கை
யிலன்! உரு

-வீரசோழியம்: அலங்காரம்: நூற்பா 27: மேற்

'காதற் புணர்ச்சியில், யாரிடத்தில் துன்பத்தை மிகுதியும் அனுபவிக்கிருர்களோ அவர்களிடத்தில் தான் தங்கள் உள்ளம் முழுவதையும் படைக்க முன் வருவர் பெண்கள். வாட்டி எடுக்கும் காட்டுமிராண்டிகளைத்தான் அவர்கள் மாலைபோட்டு வரவேற்கிருர்கள் நுண்மையான குறிப்பில் காதலை வெளியிடும் மனிதனுக்கு அவர்கள் வசப்படுவதில்லை' என்று கூறுகிருர் ரவீந்திர நாததாகூர். ஒருபெண் தலைவன் ஒருவன்பால் காதல்கொண்டாள். இருவர் காதலும் வளர்ந்தது. இருவரும் அடிக்கடி கூடிக்கலந்து மகிழ்ந்தனர். அத் தலைவன்பால் இன்பப் புணர்ச்சியில் பெறுதற்கரிய இன்பத்தை அடைந்தாள் தலைவி. இந்நிலையில் ஓர் நாள் தன் உயிர்த்தோழி தலைவனைப் பற்றிப் புகழ் மொழி கூறக்கேட்டாள். உள்ளூரப் பெருமகிழ்ச்சி. இருப்பினும் அதை வெளிக் காட்டிக்கொள்ளாமல் இகழ்வதுபோல் தன் உயிர்த்தோழியிடம் தலைவி சொல்லுகிருள்.

நடனமிடும் மயில் போலும் தன்மையையுடைய உயிர்த்தோழியே! என்னென்னவோ அவனைப்பற்றிப்

பேசுகிறாயே! அது எனக்கல்லவா தெரியும்! என்மீது அன்புடையவன் என்பது உண்மைதான். அவனுடைய அழகுமிக்க மார்பைப் புணர்ச்சிக்காலத்துக் கூடும் பொழுது, நான் மெல்லியல் தானே என்னுடைய மென்மைத் தன்மையை உணராமல் காட்டுமிராண்டி போல் நடந்துகொள்கிறான். மென்மைக் குறிப்பை அறியாதவனாயிருக்கிறான். மேலும் இவன் இப்படியெல்லாம் செய்கிறானே என்று சினங்காட்டி ஊடினேனேயானால் இகழ்ச்சிக்குரிய முறையில் தகுதி முதலியவற்றை விடுத்துத் தகாத முறையில் இறைஞ்சி என் கூடலன்பிற்கு இரந்து நிற்கிறான். எப்பொழுதும் பிறர்பால் சொல்லக்கூடிய உயர்ந்த விருப்பத்தையுடையவனாகவுமில்லை. ஏனென்றால் என்னையே விரும்பி என்னோடு கலத்தலையே விரும்புகிறான். பார்த்தாயா! என்கிறாள்.

குறிப்பு:- தலைவன் தன்னைக் கூடுங்காலத்துப் பெறுதற்கரிய சிறந்த இன்பப் புணர்ச்சியைத் தருகிறான் என்ற குறிப்பை மறைத்து வெளியில் இகழ்வதுபோல் என் மென்மையை உணராதவன் என்றுகூறி மகிழ்கிறது காதல் உள்ளம். பழிப்பதுபோலப் புகழ்வதால் இதனை அணிநூலார் இலேச அணி என்பர்.

இளி – இகழ்ச்சி

விளிவந்த – பிறர்பால் சொல்லக்கூடிய

ஒப்புமை:-

ஒன்று, இரப்பான்போல் எளிவந்துஞ் சொல்லும்
உலகம் புரப்பான் போல்வதோர் மதுகையு
முடையன்.

– கலித்தொகை: குறிஞ்சி: 11.

# 27

## அண்ணலும் அவளும்

விளைபொருள்மேல் அண்ணல்
விரும்பினையேல் என்பெடும்

கிளையமுகை கேட்பதற்கு
முன்னே – விளைதேன்

புடையூறு பூந்தார்
புனைகழலாய் போக்கிற்

கிடையூறு வாராமல்
ஏகு! உசா

–தண்டி: நூற்பா: 45; மேற்.

பொதுவாகக் காதல்உள்ளம் மலரினும் மெல்லிது என்பர். ஒரு தலைவி தலைவன் ஒருவனிடத்துக் காதல் கொண்டாள். காதல் முற்றியது. இருவர் உள்ளமும் ஒன்றுபட்டன. எப்பொழுதும் காதலன் தன் பக்கத்திலேயே இருக்க வேண்டுமென்று விரும்பியது காதலியின் உள்ளம். தலைவன் பொருள் தேடப்புறப்பட வேண்டுமென்று எண்ணினன். தான் எண்ணியதை அன்று காதலியிடம் மெல்லக்கூறினன். இதைக்கேட்ட உடனே காதலியின் உள்ளம் பிரிவை நினைந்து வருந்தித் துடிதுடிக்கத் தொடங்கிவிட்டது. பிரிவு என்றால் தான் வாழேன் என்ற எண்ணத்தைக் கொண்ட தன் உள்ளத்தை அப்படியே திறந்து காட்டித் தலைவி தலைவன்பால் சொல்லுகிறாள்.

தேன் மிகுதியாகவும் முறையாகவும் ஊறுகின்ற அழகிய மலர்களால் புனைந்து போற்றக்கூடிய அத்துணை மெல்லிய பாதத்தையுடைய பெருமைமிக்க தலைவ! எல்லா வகையிலும் நிறைந்த பயனை விளைவிக்

கின்ற செல்வத்தினை அடைவதற்கு எனை விடுத்துப் பிரிந்து செல்ல விரும்பிவிட்டாய்! ஆகவே போகும் பொழுது, ஈண்டு எங்கள் சுற்றத்தார் கூடிஅழ அவர்கள் அழுகுரல் கேட்பதற்கு முன்னே, உன் போக்கிற்கு அழுகுரலால் தடை என்ற துன்பம் வராமல் இப்பொழுதே போய்விடுவாயாக! என்கிருள்.

குறிப்பு:- பிரிவு என்றுலே தன் உள்ளம் தாங்காது உடனே உயிர் போய்விடும் என்று எண்ணு கிறது உயிர்க்காதல் உள்ளம்.

ஒப்புமை:-

செல்லாமை உண்டேல்
எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்
குரை !

- திருக்குறள்: பா. எண் 1151.

## 28

## பொல்லாத இரவு

மேவில் உடனே
விடியும்; விடியாது
கோவை மணிமார்பன்
கூடாநாள் — தேவர்
திரண்டா தரிக்கின்ற
தென்னரங்க மாலே
இரண்டாலும் பொல்லா
இரா! உஎ

-சொக்கநாதப்புலவர்: தனிச்செய்யுட் சிந்தாமணி:
பக், 109,

வாழ்க்கையில் துன்பம் நேரிடும்பொழுது வருந்துகிறோம். அத்துன்பம் நம்முடைய ஆற்றலுக்கு மேம்பட்டதாயிருப்பின் பெரிதும் வருந்துகின்றோம். அப்பொழுது நம்மையும் அறியாமல் நம்முடைய ஆற்றலுக்கு அப்பாற்பட்ட முழுமுதற்பொருளை, ஐயோ! கடவுளே! எனக் கூவியழைக்கின்றோம், இது இயற்கைதானே! தலைவி ஒருத்தி தலைவன் ஒருவன் பால் காதல் கொண்டாள். அவனோடு கூடிக்கலந்தாள். ஒருநாள் அவன் வரவில்லை. அன்று இரவு முழுதும் விழித்திருந்து வேதனைப்பட்டாள். அவனையே நினைந்து நினைந்து ஏங்கித் துடித்தாள். பொழுதோ விடிவதாகக்காணோம். அவனோ வரவுமில்லை. தலைவி வருந்தித் தனக்குள்ளே சொல்லிக்கொள்கிறாள்.

இப்பூவுலகிலுள்ள மனிதர்கள் மட்டுமல்ல; தேவலோகத்திலுள்ள தேவர்களும் ஒரு சேரத்திரண்டு கைதொழ, அவர்களை ஆதரித்துக் காக்கின்ற தென்னரங்கத்திலுள்ள திருமாலே! நீதான் காக்கவேண்டும். வரிசைவரிசையாக அமையப்பெற்ற நீலமணி மாலையை அணிந்த மார்பையுடைய எம் தலைவன் அன்போடு கூடித் தழுவுவானேயானால் இந்த இரவுப் பொழுதானது உடனே விடிந்துவிடுகிறது. அவன் எம்மைக் கூடாத நாளில் விடிவதேயில்லை. இரவுப்பொழுதானது நீண்டுகொண்டே போகிறது. என் செய்வேன்! எப்படிப் பார்த்தாலும் இந்த இரவுப் பொழுதானது இரண்டு வகையாலும் எனக்குப் பொல்லாததாயிருக்கின்றதே! என்கிறாள்.

குறிப்பு:- காதல் வயப்பட்ட உள்ளத்திற்கு இரவு விரைவில் போவதுபோலும் நீளுவதுபோலும் தென்படுகிறது. தலைவி தலைவன் பால் கொண்ட அன்பையும் பிரிவுணர்ச்சியில்படும் காதல் துன்பத்தையும் தெளிவுறக் காட்டுகிறது இக்கவிதை.

திருமாலையே கிளவித் தலைவனாக வைத்துப் பொருள் கொள்வாரும் உளர்.

ஒப்புமை:-

புல்லாதார் வல்லே
புலர்கென்பர் புல்லினார்
நில்லா யிரவே
நெடிதென்பர்—நல்ல
விராமலர்த் தார்மாறன்
வெண்சாந் தகலம்
இராவளிப் பட்ட
திது!

– முத்தொள்ளாயிரம்: பா. எண்: 86.

## 29

### நில்லென்றார் யார்!

சூரியா நின்பரிகள்
சோம்பல்மேற் கொண்டனவோ!
ஆரியத்தேர் அச்சாணி
அற்றதோ! — ஓரிமையில்
செல்லென்றால் செல்லாமல்
நீமாறி பெய்துநின்றாய்!
நில்லென்றார் சொன்னார்
நினை! உஅ

– வேதநாயகம்பிள்ளை; தனிச்செய்யுட் சிந்தாமணி:
பக்: 306

வேனிற்காலம். ஒரு பெண் தலைவன் ஒருவனைக் கண்டு காதலுற்றாள். தலைவனும் தலைவியால் காமுற்றான். இருவரும் ஒன்றாயினர். முதல் நாள் தலைவன் இரவுப் பொழுதில் அவளைச் சந்தித்தான். இருவரும் கூடி மகிழ்த்தனர். இன்பவெறி கமழ்ந்தது. பின் பிரிந்தனர். மறு நாள் வருவதாகக் கூறிச்

சென்ருன் தலைவன். மறுநாள் காலைப் பொழுது. நல்ல வெய்யில். தலைவியின் உள்ளத்தில் தலைவனைப் பிரிந்த வேதனை. காதலால் வாடினுள். இரவுப் பொழுது எப்பொழுது வரும் என்றே நினைந் திருந்தாள். ஒன்றும் ஓடவில்லை. உள்ளத்தில் வேதனை; வெளியில் சூரியனின் வெப்பம். தாங்க முடியவில்லை தலைவிக்கு! காதல் வேகத்தில் எழுந்த சினத்தோடு சூரியனை நோக்கிச் சொல்லுகிருள்.

சூரியனே! ஓடிக்கொண்டிருந்த நின்னுடைய குதிரைகள் சோம்பலை மேற்கொண்டு விட்டனவோ! இல்லை உன்னுடைய உயர்ந்த அழகுமிக்க தேராகிய ஒற்றைத்தேரின் அச்சுத்தான் முறிந்துபோய் விட்டனவோ! ஓர் இமைப்பொழுதில் போய்விடுக என்று சொன்னல் போகாமல் நெருப்பை அப்படியே கொட்டிக்கொண்டு நிற்கின்ருயே! வேகமாகப் போகாதே இங்கே நில் என்று நின்னைச் சொன்ன வர்கள் யார்? சொல்! என்கிருள்.

குறிப்பு:- காதல் நெஞ்சு துடிதுடிப்போடு காதலனைக் காண எழுகிறது; இரவுப்பொழுதிற்கு ஏங்கு கிறது; காதலற் பிரிவால் கொதிப்படைகிறது; அவ்வெப்பமிகுதி சூரியனுல் உண்டாகிறது எனச் சூரியன்மேல் சினக்கிறது.

பரி - குதிரை.

ஆரியத்தேர் - உயர்ந்த அழகுமிக்க தேர்,

**வேதநாயகம் பிள்ளை:-**

திரிசிரபுரத்தையடுத்த வேளாண்குளத்தூ ரிலே பிறந்தவர். தந்தையின் பெயர் சவரி முத்துப்பிள்ளையவர்கள். இவர் சீர்காழி-மாயூரம் முதலிய இடங்களில் மாவட்ட முனிசிப்பாக இருந்தவர். நீதிநூல்—சருவ

சமய சமரச கீர்த்தனை — பிரதாபமுதலியார் சரித்திரம்—பெண் மதிமாலை—முதலிய இவர் இயற்றிய நூல்கள். இவர் கத்தோலிக்கக் கிறித்துவ சமயத்தவர். மகாவித்வான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர் களின் மாணாக்கராவார்.

## 30

### யார்க்கோ விலங்கு!

அலங்கல் அணிமார்பன்
ஆறையர்கோன் வாணன்
விலங்கு கொடுவருக
என்றான்—இலங்கிழையீர்!
சேரற்கோ சோழற்கோ
தென்பாண்டி நாடாளும்
வீரற்கோ யார்க்கோ
விலங்கு! உக

- பெருந்தொகை; பா. எண். 1185.

வாணனுடைய புகழ் நாளுக்கு நாள் ஓங்கி வளர்ந்து வந்தது. அவன் அரண்மனையிலுள்ளவர் களுக்கெல்லாம் அவன்கீழ் வேலை பார்ப்பதில் ஒரே மகிழ்ச்சி. வேலைக்காரர்களுக்கே இப்படியென்றால் அவனது காதற்கிழத்திகளைப்பற்றிச் சொல்ல வேண்டுமா! அவனது காதற்கிழத்திகளில் ஒருத்தி மன்னன் அழகிலும் வீரத்திலும் மயங்கியிருந்தாள். ஒருமுறை மன்னவன் அவளோடு உரையாடிக் கொண்டிருந்தான். அப்பொழுது தூதுவன் ஒருவன் நிருபம் ஒன்று கொண்டுவந்து கொடுத்தான். அதனைப் படித்தபின் மன்னவன் தாதி ஒருத்தியைப் பார்த்துச் சினத்தோடு விலங்கு கொண்டுவா என்று

கூறிச் சென்றுவிட்டான். அப்பொழுது அக்காதற் கிழத்தி தனித்துத்தன் உடன் தோழியர்பால் கூறுகிறுள்.

விளங்குகின்ற அணிகலன்களை யுடையவர்களே! பூமாலையும் அழகிய அணிகலன்களையும் அணிந்த மார்பையுடையவனும் ஆறையர்களுக்குத் தலைவனு மானவன் தம் வாணர்குல மன்னன். அவன் விலங்கு கொடுவருக என்று சொல்லுகிறுன். அவ்விலங்கு சேர நாட்டு மன்னனுக்கோ அல்லது சோழநாட்டு மன்னனுக்கோ அல்லது தெற்கேயுள்ள பாண்டிய னுக்கோ யாருக்கோ தெரியவில்லையே யம்மா! என்கிறுள்.

குறிப்பு:- வாணனுக்கு நிகர் வாணனே என்றும், சேர சோழ பாண்டியர்கள்கூட அவனுக்கு நிகரா கார் என்றும் எண்ணுகிறது காதல்உள்ளம், அவனது அழகிலும் வீரத்திலும் அத்துணை ஈடுபாடு அவ்வுள்ளத்திற்கு!

அலங்கல் - பூமாலை

இலங்கிழையிர் - விளங்குகின்ற அணிகலன் களையுடையீர்!

# 31

## கைவளையும் காதல் உள்ளமும்

நங்கை பயணம்
நமக்கென் றுரைத்தளவில்
அங்கம் பசலைநிறம்
ஆனதே—செங்கை
வளைநெகிழப் பாதி
மறுத்தேனென் றேத
உளநெகிழப் பாதி
யுடைந்து! ௩௦

- சொக்கநாதப் புலவர்: தனிச்செய்யுட்
சிந்தாமணி; பக். 109.

உடல் வளமிக்க ஒருவனுக்கு உளவருத்தம் மிகுமேயானால் உடல் தளர்ந்து மெலியக் காண்கின்றோம். அதிலும் காதல் வயப்பட்டவர்களுக்கோ மெலிதலும் மகிழ்தலும் அடிக்கடி ஏற்படுதல் இயற்கை. தலைவி ஒருத்தி தலைவன் ஒருவன்பால் காதல் கொண்டாள். உயிரனைய காதலில் இருவரும் திளைத்திருந்தனர். ஒருமுறை, அவளுடைய அன்பு கிடைத்தற்கரிய ஒன்று என்று பாராட்டித் தலைவன் தனக்குள்ளே கூறி மகிழ்கிறான்.

அவள் அன்று தினம் மகிழ்ச்சியோடிருந்தாள். நான் மெல்ல நங்கையே என்றேன். அவள் ஏன் என்றாள். நமக்கு (தனக்கு) வெளியூர் செல்வதற்குப் பயணம் வந்திருக்கிறது என்று நான் கூறினேன். கூறின அளவில் உடனே பிரிவை நினைந்து மயங்கி வெளுத்துப் பசலை நிறம் மேவப்பெற்றாள். உடல் மெலிந்தாள். அம்மெலிவால் அவளுடைய சிவந்த கையினின்றும் கைவளையல்கள் நெகிழ்ந்துகொண்டிருந்தன. இதைப்பார்த்தேன். இடையில் சரி நான்

போகவில்லை என்று உரைத்தேன், பார்க்க வேண்டுமே! உடனே அவள் உள்ளத்தில் துன்பம் போயகல இன்பம் வெளிப்பட்டது. மகிழ்ந்தாள். அந்தப் பூரிப்பில் உடல் பெருத்தது. கையினின்றும் நெகிழ்ந்துகொண்டிருந்த கைவளை உடலின் பூரிப்பால் உடைந்தது. என்னே இவள் அன்பு! என்று கூறி மகிழ்கிறான்.

குறிப்பு:- பிரிவு என்ற அளவில் துன்புறுதலும், அஃது இல்லை என்ற அளவில் இன்பமடைதலும் உயிர்க்காதல் வயப்பட்டவர் தம் இயல்பு என்பதையும், பிரிவுணர்ச்சியில் நிகழும் காதல் துன்பத்தையும் சித்தரிக்கிறது கவிதை.

**சொக்கநாதப் புலவர்:-**

இனிய தமிழ்க் கவிஞர். இடைக்காலப்புலவர்களில் ஒருவர். இவர் காலம் அறியக்கூடவில்லை. இப்புலவர் வறுமையால் வாடியவரென்றும், வேடிக்கைதோன்றப் பாடக்கூடியவரென்றும் இவர் பாட்டுக்கள் தெரிவிக்கின்றன. இவர் பாட்டுக்கள் தனிப்பாடல் திரட்டில் தொகுக்கப்பெற்றுள்ளன.

- கலைக்களஞ்சியம்; தொகுதி ஐந்து; பக்; 245.

**ஒப்புமை:-**

செய்யார் எனினுந்
தமர்செய்வ ரென்னுஞ்சொல்
மெய்யாதல் கண்டேன்
விளங்கிழாய்! —கையார்
வரிவளை நின்றன
வையையார் கோமான்
புரிவளை போந்தியம்பக்
கேட்டு!

- முத்தொள்ளாயிரம்: பா. எண். 80

## 32

### கன்னித்தமிழும் கதிரவனும்

ஓங்க லிடைவந்
    துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத்
    திருளகற்றும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி
    வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத
    தமிழ்! க

—தண்டி: நூற்பா; 50; மேற்.

உலகம் உறங்கிக்கிடக்கிறது. அது விழிப்புற உதயமாகிறுன் கதிரவன். தன் கதிர்வழி ஒளி உமிழ்கிறுன். மக்கள் விழித்தெழுகின்றனர். உடல்வளம் பெறுகிறது. முடங்கிக்கிடந்த அறிவு முனைந்துஎழுகிறது. மலர்கள் மலர்ந்துமணம்வீசுகின்றன. செடியும் கொடியும் செருக்குடன்மிளிர்கின்றன. இருளைஉண்டஒளிவெள்ளத்தை இருகண்களாலும் கண்டு கைதொழுகின்றனர் மக்கள்.

நாவசைத்தான் தலைமகன். நல்லதமிழ் எழுந்தது; இனிமை பொழிந்தது; உள்ளங்கவர்ந்தது; ஏற்புடைக் கருத்தைஇதயத்தில் பதித்தது. அறிவுநூல் பிறந்தது. அறியாமை அகன்றமனிதன் அருந்தமிழைத் தலைமேற் கொண்டு கைதொழுது வணங்கினன்.

கன்னித் தமிழையும் கதிரவனையும் கைகூப்பி வணங்குகிறார் கவிஞர்.

(கதிரவன்) உயர்ந்த மலைகளுக்கிடையே தோன்றும். உயர்வுக்குரிய மக்கள் இனம் தொழ விளங்கும். பேரிரைச்சலுடன் ஒலிக்கும். கடல்களால் சூழப்பெற்ற இந்த உலகத்திலுள்ள இருளை அகற்றி ஒளியைக் கொடுக்கும். (தமிழ்) மிக உயர்ந்த பொதியமலையில் தோன்றும். உயர்வுக்குரிய மக்கள் குலம் தொழுதேத்த விளங்கும். பேரிரைச்சலுடன் ஒலிக்கும். கடல்சூழ் இவ் வுலகமக்கள் அறியாமையை அகற்றி அறிவொளிதரும். அவற்றுள் ஒன்று ஒளிக்கதிரும் அழகும், ஒற்றைத் தனித்தேரும் கொண்ட கதிரவன்; ஏனையது தனக்கு நேரில்லாத ஒப்பற்ற கன்னித் தமிழாகும்! என்கிறார்.

## 33

### சதயத் திருநாள்

ஏமாரு மன்னிர்!
எயில்திறமின் எங்கோமான்
வாமான்தேர்க் கோதை
சதயநாள்—ஆமாறு
காம நுகருமின்
கண்படுமின் என்னுமே
ஏம முரசின்
குரல்! உ

•தொல்: பொருள்;புறத்திணை: நச்சி: நூற்பா 91: மேற்

சேரமன்னன் பிறந்தநாள், சதய விண்மீனுக்குரிய நாள். மன்னன் பிறந்தநாளைப் பெரிய திருவிழாவாகக் கொண்டாடினர் மக்கள். ஊரை அழகு செய்தனர். அரசவை அன்று பெருமகிழ்ச்சியோடு கூடிற்று. இசை எழுந்தது. முரசு முழங்கியது. கவிஞர் மன்னனைப் பாராட்டுகிறார்.

இப்பொழுது முரசு முழங்கக் கேட்டீர்கள்! இந்த முரசு என்ன சொல்லுகிறது தெரியுமா? என்ற ஒரு கேள்வியைப் போட்டுக்கொண்டார். இந்த முரசு பகை மன்னர்களை நோக்கிப் பேசுகிறது என்று கூறிக் கொண்டு மேலும் பேசுகிறார் கவிஞர்.

மனக்கலக்கத்தோடு கூடிய பகை மன்னர்களே! எங்கள் தலைவனும்-போர்க்களத்தின் கண்ணே தாவி ஓடும் வலிமைமிக்க குதிரைபூட்டிய போர்புரியும் தேர்ப் படையை யுடையவனுமான சேரமன்னன் பிறந்தநாள் இற்றைநாள்! சதய விண்மீனுக்குரிய நாள். ஆகவே இன்று அவன் யார்மேலும் போர் தொடுக்கமாட்டான். அதனால் நீங்கள் ஒளிந்துகொண்டிருக்கும் உங்கள் கோட்டை மதிற்கதவுகளைத்திறந்து விடுங்கள்! கலங் காதீர்கள்! மகிழ்வோடு இருங்கள்! அதற்கு வழி அச்சத்தால் இவ்வளவு நாட்கள் பிரிந்து வாழ்ந்த உங்கள் மனைவியருடன் மகிழ்வோடு இன்பம் நுகருங்கள். உறங்காது உங்கள் கோட்டைகளைக் காவல்புரிந்தீர்களே! இன்றுமிக நன்றாக உறங்குங்கள் என்று பாதுகாவலோடு கூடிய நம் மன்னனது முரசு முழங்குகிறது! என்கிறார்.

குறிப்பு:- மன்னர்கள் பிறந்தநாளான பெருமங்கல விழாவில் சிறைவிடுதல், செருஒழித்தல் முதலியன நிகழ்தல்மரபு. இன்றுசேரமன்னன் பிறந்தநாள். ஆகவே யார்மேலும் அவன் போர் தொடுக்கமாட்டான். பகைவர்களே! நீவிர் அஞ்சாதீர்! இன்பம் நுகருமின் என்று

கூறுவதன் மூலம் சேரமன்னனது அளவிடற்கரிய ஆற்றலைப் புகழ்ந்து புலப்படுத்துகிறார் கவிஞர்.

'வாமான் தேர்க்கோதை' என்ற முத்தொள்ளாயிரத் தொடர், இப்பாடலின் ஆசிரியர் உள்ளத்தைக் கவர்ந்து இப்பாடலில் இடம் பெற்றமை காண்க.

ஏமாரும் — மனங்கலங்கும்.

எயில் — மதில்.

ஆமாறு — (ஆகும்+ஆறு)—வழி.

ஏமம் — பாதுகாவல்.

ஒப்புமை:-

கண்ணார் கதவந்
திறமின் களிறொடுதேர்
பண்ணார் நடைப்புரவி
பண்விடுமின் — நண்ணார்தம்
தேர்வேந்தன் தென்னன்
திருவுத் திராடநாள்
போர்வேந்தன் பூசல்
இலன்!

-முத்தொள்ளாயிரம்: பா. எண்: 93.

## 34

### தாளணியும் தலையும்

ஏங்கா முகில்பொழியா
நாளும் புனல்தேங்கும்
பூங்கா விரிநாடன்
போர்மதமா — நீங்கா
வளைபட்ட தாளணிகள்
மாறெதிர்ந்த தெவ்வர்
தலைபட்ட தாட்டா
மரை! ௩

— தண்டி: நூற்பா 79: மேற்.

யானைவரும் பின்னே மணியோசைவரும் முன்னே! என்பது பழமொழி. சோழனுடைய யானைகள் போருக்குப் புறப்பட்டன என்றாலே வெற்றி முன்னே வந்து நிற்குமாம். குறுநில மன்னர்கள் பலர் குழுமியிருந்தனர். அவர்களுடன் கவிஞர் சோழ மன்னனுடைய யானையைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். அப்பொழுது அதன் ஆற்றலைக் குறித்துப் பாடல் ஒன்று கூறுகிறார் கவிஞர்.

மேகம் இடித்து மழைபொழியாத நாளினும் ஊற்று நீரால் எக்காலத்தும் வற்றாது நீர் தேங்கும் அழகிய காவிரி பாயும் நாட்டையுடையவன் நம் சோழ மன்னன். அவனுடைய மதங்கொண்ட போர்புரியும் யானைப்படையைப்பற்றிக் கேட்கவேண்டுமா என்ன? யாராவது சோழனுடைய கருத்துக்கு-நீதிக்கு மாறுபட்டு அவனை எதிர்ப்பார்களேயானால் அவர்களை அடக்க யானைப்படை புறப்படும். அப்பொழுது யானைகளின் கால்களிலெல்லாம் கழன்று விழாவண்ணம் வளைத்தமைக்கப்பட்ட போருக்குரிய அணிகளைப் பூட்டுவர். அப்படி அவ்வணிகள் பூட்டப் பட்டன; அப்பொழுதே பகை மன்னர்களுடைய

தாமரை போன்ற கால்களிலெல்லாம் விலங்குகள் பூட்டப்பட்டன! என்கிறார்.

குறிப்பு:- சோழ யானைகளுக்குத் தாளணிகள் பூட்டப் பட்டால் உடனே பகை மன்னர் கால்களிலும் விலங்கிடப்படும் என்பதிலிருந்து சோழனது யானைப் படை போர் ஆற்றல்மிக்கது என்பதும், போர் என்றாலே வெற்றி ஒன் றைத்தான் அப்படை அறியும் என்பதும், சோழன் வீரமிக்க பெரும் படையாளன் என்பதும் புலப்படுகின்றன.

ஏங்குதல்—ஒலித்தல்; ஈண்டு ஏங்கா என் பதைச் செய்யா என்னும் வாய்பாட்டு வினை யெச்சமாகக்கொள்க.

பொழியா - பொழியாத: ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்சம்.

நீங்காவளைபட்ட தாளணிகள் — கால்களி னின்றும் கழன்று விழாவண்ணம் வளைத்து அமைக்கப்பட்ட போர்க்குரிய தாளணிகள்.

தெவ்வர் - பகைவர்.

தளை - விலங்கு.

காவிரி நீர் நாடன் - காவிரி நீர் பாயும் சோழ நாட்டையுடைய சோழன்.

# 35

## காப்பு எது?

பொருப்பிற் கரிய
புகர்முகவெங் கூற்றின்
மருப்பில் துளைப்புண்ணை
வாரா—திருப்பின்
வடியுளவாம் செவ்வேல்
மகதையார் கோமான்
அடியுளவாம் வேந்தர்க்
கரண்!

–பெருந்தொகை; பா. எண்: 1164.

காரியம் முடியவேண்டுமானல் காலைப்பிடி!என்பது பழமொழி. மகதையார் கோமான் வாணன் பெருமைக் குரிய மன்னவன். எங்கும் அவன் புகழையே பாடினர் வேந்தர்கள். அவன்கீழ் எத்துணையோ குறுநில மன்னர்கள் திறைசெலுத்தி வாழ்ந்தனர். ஒருமுறை கவிஞர் ஒருவர் மன்னனைக் காணவந்தார். மன்னன் அவரைப் பெரிதும் வரவேற்முன். பின் கவிஞர் மன்னனைப்பற்றிப் பாடல் ஒன்று கூறினுர்.

கூர்மையோடு கூடிய வேற்படையையுடையவன் மகத நாட்டு மன்னர் மன்னனுன வாணன். அவனது பட்டத்துப் போர்யானையோ மலையினைப்போன்று கருமை நிறமுடையது. கொடிய எமனை ஒத்தது. அதன் கூறிய கொம்புகளால் முகத்தில் குத்துவதனு லுண்டாகும் துளைப்புண்கள் பகைவேந்தர்களது முகத்தில் ஏற்படாமலிருக்க வேண்டுமானல் அவர் களுக்கு அதற்குரிய பாதுகாப்பு மகதை மன்னனுடைய திருவடிதான் என்கிருர்.

குறிப்பு:- பகைவர் அழிவினின்றும் தப்புதற்கு வழி மகதை மன்னனுடைய திருவடி தொழுதலே

என்றார் கவிஞர். அவனை வணங்க அவன் வாழ்வு தருவான் என்பதும் - அவனது யானைப்படை எமனையொத்த வலிமைமிக்கது என்பதும் இப் பாடலில் பெறப்படுகின்றன.

பொருப்பு — மலை
புகர்முகம் — யானை
மருப்பு — யானையின் கொம்பு
அரண் — பாதுகாப்பு
வடி — கூர்மை

இப்பாடல் திருவண்ணாமலை அருணாசலேச்சுவரர்கோயில் சாசனத்திலுள்ளது என்கிறார் பெருந்தொகை ஆசிரியர்.

## 36

### தொழுந் தாமரை!

பொன்னி வளநாடன்
கைவேல் பொழிநிலவால்
முன்னர் அசைந்து
முகுளிக்கும்—தன்னேர்
பொரவந்த வேந்தர்
புனைகடகச் செங்கை
அரவிந்த நாரு
யிரம்! ரு

- தண்டி: நூற்பா 63: மேற்.

மனிதர்களில் ஒரு சிலருடைய தோற்றங்கள் அருமையான உணர்ச்சிகளையும் சக்திகளையும் அளிப்பதை நாம் காணலாம். அப்படிப்பட்ட உருவங்களில் நம் சோழ மன்னனுடைய திருவுருவமும் ஒன்று.

அவன் பெண்களின் உள்ளங்கவர் உருவம் படைத்தவன் மட்டுமல்லன்; வீர உணர்வினல் பகைவரையும் பணியத் தூண்டுவிக்கும் வடிவினனுமாவன் என்று பாராட்டுகிருர் கவிஞர்.

தன்னேடு நேருக்குநேர் போர்புரியவந்த கடகம் புனைந்த பகைமன்னர் தம் சிவந்த கைகளாகிய நூருயிரம் தாமரை மலர்கள் காவிரி நதிபாயும் வள நாடனுகிய நம் சோழனது கைவேல் பொழிகின்ற நிலவொளிக்குமுன் அசைந்து நடுங்கிக் குவியும்! என்கிருர்.

குறிப்பு:- தாமரை கதிரவனைக்கண்டு மலர்தலும் நிலவைக்கண்டு கூம்புதலும் இயற்கை. ஈண்டுக் கவிஞர் பகைவேந்தர்தம் கைகளைத் தாமரை மலர்களாகவும், சோழனது கைவேல் ஒளியை நிலவாகவும் கொண்டு கூறிய கற்பனை எண்ணிக் களிக்கத்தக்கதொன்று. உண்மையில் போர் செய்யவந்த பகைவர் போர் செய்யாது சோழனை வணங்கத் தூண்டிய உணர்வு அவனது போர்க்கோலங்கண்டு எழுந்தது எனக்கொள்க. அவன் வீரத்தின் திருவுருவினன் என்றே குறிப்பாலுணர்த்துகிருர் கவிஞர். செங்கை அரவிந்த நூருயிரம் என்ற தொடர் எண்ணி எண்ணி மகிழத் தக்கதொன்று. நூருயிரம் என்பது தொகை மிகுதியைக் காட்டும் என்க.

முகுளிக்கும் — குவியும்

பொரவந்த வேந்தர் — போர் செய்யவந்த பகைவேந்தர்.

அரவிந்தம் — தாமரை.

## 37

## வெல்வார் யார்?

வீரத்தால் வின்றைதல்
மெய்த்தவத்தால் விடாதல்
ஆரத்தால் ஆள்வதெவர்
தாடேற்ற—ஒரோத்த
மீன்ருர் படைத்தடக்கை
வீரரா சேந்திரனுக்
கொன்ருராய் வாழ்வ
துலின்! ௬௯

— 'பிற்காலச் சோழர் சரித்திரம்' டி. வி. சதாசிவப் பண்டாரத்தார்: பக். 287.

ஒரு செயலில் வெற்றியடைய முடியாது என்று திண்ணமாகத் தெரிந்தால் செயலில் புகும் ஒருவரை மற்றொருவர் பார்த்து, நீ தோல்வியடைந்து திரும்ப வேண்டுமானல் செய்க என்று வாழ்க்கையில் சொல்ல நாம் கேட்டிருக்கிரும். வீர ராசேந்திரசோழனுக்கு நிகர் அவனேதான். அவன் படை போரில் வெற்றி ஒன்றைத் தவிர வேறு அறியாது. அவ்வளவு திறமையும் பயிற்சியும் மிக்கது. ஒருமுறை போரில் வென்று திரும்பிய மன்னனைக் கவிஞர் பாராட்டுகிருர்.

நம்முடைய வீரராசேந்திரசோழமன்னன் மன்னர்களுக்கெல்லாம் தலைமையேற்கும் மன்னர் மன்னன், பெரும்புகழ் படைத்தவன். ஒளிமிக்க படைபலமும் தோளாற்றலும் மிக்கவன். அவனுக்கு இவ்வுலகில் பகைவராய் வாழ நேர்ந்தால், ஒன்று அவர்கள் சோழனேடு எதிர் நின்று போரிட்டு மடியவேண்டும். அல்லது இவ்வுலக வாழ்வைத் துறந்து துறவுபூண்டு தவ

ஒழுக்கச் சீலராய் உண்மையைநாடி வீடடைய முயல வேண்டும். இல்லெனில் அவனை வென்று இவ்வுலகில் வெற்றிமாலைசூடி ஆள்பவர் யாராவது உளரா! இல்லை! இல்லை! என்கிறார்.

குறிப்பு:- சோழன் வீரத்தின் திருவுருவினன் என்றும் அவன் காலத்தில் எப்பகுதியில் அவன் படை யெடுக்க நேரினும் அவனே வெற்றியுடன் திகழ்வானென்றும், போர்முறைப்படி போர் புரிபவனென்றும் கூறிச் சோழன் புகழ்பாடு கிறார் கவிஞர்.

ஆரம் -பூமாலை

தாடேற்ற - தலைமைபொருந்திய; தாடு+ஏற்ற எனப் பிரிக்க.

ஒன்னார் -பகைவர்.

**வீராசேந்திரன்:-** இவ்வரசன் கங்கைகொண்ட சோழனுடைய புதல்வர்களுள் ஒருவன். இம்மன்னன் ஆவணித் திங்கள் ஆயிலிய நாளிற் பிறந்தவன். கி. பி. 1062-ம் ஆண்டில் இளவரசுப்பட்டம் கட்டப் பெற்று கி. பி. 1063ல் சோழப் பேரரசுக்குச் சக்கர வர்த்தியாக முடிசூட்டப்பெற்றான். இவன் வீரமே துணையாகவும் தியாகமே அணிகலனாகவும் கொண் டவன். இவ்வேந்தன் தன்னுடன் பிறந்த முன்னவர் போல் பேராற்றல் படைத்த பெருவீரனாகவிருந்தமை யால் இவனது ஆட்சிக்காலம் முழுதும் போரிலேயே கழிந்தது. இவனுக்கு அந்நாளில் பல பட்டங்கள் வழங்கின. அவை:- சகலபுவனாசிரயன், ஸ்ரீமேதினி வல்லபன், இரவிகுலதிலகன், மகாராசாதிராசன், பரமேசுவரன், பரமபட்டாரகன், சோழகுலசேகரன், பாண்டியகுலாந்தகன், ஆகவமல்லகுலகாலன், ஆகவ மல்லனை ஐம்மடிவென்கண்ட ராசசேகரன், இராசா சிரயன், இராசராசேந்திரன், வீரசோழன், கரிகால சோழன்,வீரன், இரட்டராசகுலகாலன் என்பனவாம்.

வீரராசேந்திரன் ஆட்சிக்காலத்தில் பாண்டிய மண்டலத்தில் மிழலைக் கூற்றத்திலுள்ள பொன்பற்றி என்னும் நகரில் சிற்றரசனாயிருந்த புத்தமித்திரன் என்பான் இவன் விரும்பியவாறு ஐந்திலக்கணங்களும் அடங்கிய நூல் ஒன்று எழுதி அதற்கு வீரசோழியம் என்றுபெயரிட்டுள்ளான். அந்நூலில், 'எல்லாவுலகும்

மேவிய வெண்குடைச்செம்பியன்வீரராசேந்திரன்றன்
நாவியல் செந்தமிழ்ச் சொல்'

-வீரசோழியம் சந்திப்படலம்: 7.

எனவும்,

'தேமேவியதொங்கற்றேர்வீரசோழன்றிருப்பெயரால்
பூமேலுரைப்பன்வடநூன்மரபும்புகன்றுகொண்டே'

-வீரசோழியம் பாயிரம்: பா. 3.

எனவும் இம்மன்னன்பாராட்டப்பெற்றிருப்பதுஅறியற்பாலது. எனவே இவன் தமிழ்மொழி வளர்ச்சியிலும் ஈடுபட்டிருந்தனன் என்பது தேற்றம்.

இவ்வரசர் பெருமானது பட்டத்தரசி உலக முழுதுடையாள். இம்மன்னன் சிவபெருமானிடத்தில் பேரன்புபூண்டவன். இவன்கி. பி. 1070ஆம் ஆண்டின் முற்பகுதியில் இறந்திருத்தல் வேண்டும் என்பது திண்ணம்.

—பிற்காலச் சோழர் சரித்திரம்.

# 38

## வாள் செய்வன

பற்றலர்மண் கொள்ளும்
பணிந்தார்க் கரசளிக்கும்
கொற்ற முயர்க்குமறங்
கூறுமே — விற்றடந்தோள்
வில்லவனை வென்றுகொண்ட
வீரமா றன்செழியன்
வல்லமெறிந் தானேந்து
வாள்! எ

–கலியன் கவிராயர்: பாண்டியர்வரலாறு; பக் 169.

வரதுங்க ராம பாண்டியனின் முடிசூட்டுவிழா. மன்னனின் முடிசூட்டுவிழாஎன்ருல்கேட்கவேண்டுமா! அன்றுதினம் மக்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் வீட்டுவிழாவாகக் கொண்டாடினர்கள். ஊர் வீடு அரண்மனை எல்லாவற்றையும் அலங்கரித்து மகிழ்ந் தார்கள். மன்னன் அவையில் வெளிநாட்டு மன்னர் களும் அரச தூதுவர்களும், மக்களும் குழுமியிருந் தனர். முடிசூட்டி முடிந்தது. எல்லோரும் வாழ்த் தினர்கள். அப்பொழுது கலியன் கவிராயர் எழுந்து மன்னனுடைய வீரத்தைப் பாராட்டி வாழ்த்துகிருர்.

இன்று நம் மதிப்பிற்குரிய மன்னர்மன்னன் வர துங்க ராமபாண்டியனின் முடிசூட்டு விழா! இன்று அவன் கையில் வீரமேஉருக்கொண்ட வாளைப்பிடித் துள்ளான். அவன், வீர வில்லைஏந்தித் தடங்கொண்ட தோளைப்பெற்ற சேரனுடன் போர்செய்து அவனது ஊராகிய வல்லத்தைப் பெற்றவன். அப்படிப்பெறுதற் கரிய வெற்றியைப்பெற்ற வீரமாறன் செழியன் ஏந்தி யிருக்கும் வாள் என்னென்ன செய்யும் தெரியுமா? போர்செய்து பகைவர் நாட்டைத்தன்பால் கொள்ளும். போர் செய்ய ஆற்ருது என்னைக் காப்பாற்றுக-என்று

பகைவேந்தர்கள் பாண்டியன் திருவடியைப் பணிந்தார்களேயானால் அவர்களுக்கு அவர்களுடைய நாட்டைத் திரும்ப அளிக்கும். எங்குச் சென்றாலும் பாண்டியனுக்கு வெற்றியையே கொடுத்து அவன் புகழை உயர்த்தும். நீதி தவறிய வேந்தர்களுக்கும் மக்களுக்கும் அவரவர்களுக்குரிய அறத்தைக் கூறும்! என்கிறார்.

குறிப்பு:- பற்றலர்—பகைவர்
கொற்றம்--வெற்றி
வில்லவன்—சேரன்
வல்லம்—சேரநாட்டிலுள்ள ஒரு ஊர்.
சேரமன்னனுக்குரியது.
செழியன்—பாண்டியன்

**வரதுங்கராமபாண்டியன்:-** இவன் பராக்கிரமகுல சேகர பாண்டியனுடைய இரண்டாவது மகன். கி. பி. 1588ல் முடிசூட்டப் பெற்றவன். அபிராமசுந்தரேசுவரன் எனவும், விரபாண்டியன் எனவும், செப்பேடுகளில் குறிக்கப்பெற்றிருக்கிறான். இவன் வில்லவனை வென்றானென்றும், வல்லமெறிந்தானென்றும் தென்காசியிலுள்ள ஒரு கல்வெட்டு உணர்த்துகின்றது, மேலேயுள்ள பாடல் அக்கல்வெட்டிலிருந்து கிடைத்ததே! இப்பாண்டியன் தமிழ்மொழியில் பெரும் புலமைபடைத்தவன். இவன் இயற்றியுள்ள நூல்கள்:- பிரமோத்தரகாண்டம், கருவைப்பதிற்றுப்பத்தந்தாதி, கருவை வெண்பா அந்தாதி என்பன. இவன்சிவபெருமானிடத்து ஒப்பற்ற பக்தியுடையவன்.

—பாண்டியர் வரலாறு: பக்: 168—169

**கலியன் கவிராயர்**-திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள தென்காசியில் வாழ்ந்தவர், வரதுங்கராமன் முடிசூட்டு விழாவில் நாண்மங்கலமும், குடைமங்கலமும், வாண்மங்கலமும் பாடி அரசனைப் பாராட்டியுள்ளனர்.

# 39

## பேரெழுதி வாழ்தல்!

தாரும் முடியும்
முரசுந் தமக்குரிய
பாரும் உடன்பெறுவர்
பார்வேந்தர்—வீரப்
பெருமாண் மகதேசன்
பேரெழுதித் தத்தம்
திருமார்பி லாளோலை
செய்து! அ

—பெருந்தொகை: பா. எண்: 1158.

வேந்தர்களுக் குள்ளே ஒப்புயர்வற்ற மன்னர் மன்னனாக விளங்கினான் வாணன். புகழும் படைவலியும் திறமையுமிக்கவன். அவனுக்குப் பணிந்து அவன் பெயர்கூறி வாழ்ந்தால் மிக்க புகழோடு வாழலாம் வேந்தர்கள். அப்படியில்லாதவர் உண்மையில் எல்லாவற்றையும் இழப்பர் என்று கூறி வாணனை வாழ்த்துகிறார் கவிஞர்.

மகதநாட்டு மன்னனான வாணர்குல மன்னவன் வீரத்தில் சிறந்தவன்; பெருமையும், மாட்சிமையும் உடையவன். அவனுக்குப் பணிந்து இவ்வுலகிலுள்ள வேந்தர்கள் தங்கள் தங்கள் அழகிய மார்புகளிலே பெருமைக்குரிய வாணனுக்கு அடிமை என அவன் பெயரைப் பச்சைகுத்திக்கொண்டு தங்கள் தங்கள் மாலை - முடி - முரசு - தங்களுக்குரிய நாடு ஆகிய அனைத்தையும் ஒருசேரப்பெற்று வாழ்வர்! என்கிறார்.

குறிப்பு:- தங்கள் மேனியின் ஒரு பகுதியில் பச்சை குத்திக் கொள்ளுதல் அக்காலத்திய வழக்கம். குறவர், வேடுவர் முதலியவர்கள் தங்கள்

கைகளில் பச்சை குத்திக்கொள்வதை நாம் இன்றும் காணலாம். வாணன் பெயர் எழுதினால் பெருவாழ்வு, இல்லெனில் பெருந் தாழ்வு என்கிறார் கவிஞர்.

ஆளோலை — அடிமை யோலை

'எழுதுமா ளோலை வாங்கி'

—பெரிய புராணம்: தடுத்தாட்: 45.

திருமார்பில் ஆளோலை செய்தலாவது,, பணிந்த பகைவர்க்கு அவர்தம் மார்பில் இன்னார்க்கு அடிமை என்று பச்சை குத்தி விடுதல்.

## 40

### புருவ வளைவு

தென்னர் முதலா
வுலகாண்ட செம்பொன்முடி
மன்னர் பெருவாழ்வும்
வாள்வலியும்—மின்னும்
உருவத் திகிரி
உயர்நெடுந்தேர் வாணன்
புருவக் கடைவளையப்
போம்! கூ

—பெருந்தொகை: பா. எண். 1162.

சிற்றரசன் ஒருவனுடைய கொலு மண்டபம். அங்கு வீற்றிருந்தான் வாணர்குலப் பேரரசன். அவனுடைய வருகையைப் பெருவிழாவாகக் கொண் டாடினான் அந்த ஊர்ச் சிற்றரசன். அவனுடைய அவைக் கவிஞன் வாணனுடைய வீரப்புகழ் பாடுகிறான்.

நம் வாணர்குல மன்னவன் ஒளி பொருந்திய அரசாணையை யுடையவன். உயர்ந்த நெடுந்தேர்ப் படையையுடையவன். அவனுடைய புருவம் சினத்தால் கொஞ்சம் வளைந்தால்போதும். பாண்டியர் முதலாக இவ்வுலகத் தரசர் செம்பொன்முடிகள்போம்; அம் மன்னர் பெருவாழ்வுபோம்; அவர்தம் வலியும்போம்! என்கிறார் கவிஞர்.

குறிப்பு:- வாணன் போர் தொடுக்க வேண்டாம்; சினந்தாலே பகை மன்னர்கள் அனைத்தையும் இழப்பர் என்பதன்மூலம் வாணன் போர் புரிவதில் பெரு வீரம் படைத்தவன் என்பது பெறப்படுகிறது.

உருவத்திகிரி - அழகிய ஆணைச்சக்கரம்.

இப்பாடல் திருவண்ணாமலை அருணாசலேச்சுவரர் கோயில் சாசனத்திலுள்ளது என்கிறார் பெருந்தொகை ஆசிரியர்.

## 41

## ஆயிரவிழியான் அல்லல்

வாட்டானைத் தென்னவர்கோன்
மாகதற்குத் தோற்றசெய்தி
கேட்டான்அத் திக்குராலும்
கேட்டதற்பின்—நாட்டம்
பொருந்தா யிரவிழியான்
பொன்முடியைச் சாய்த்தங்
கிருந்தானிங் கென்னுகும்
என்று! ௧௦

—பெருந்தொகை: பா. எண்: 1186.

வாணர் குலத்தரசனுடைய புகழ் நாளுக்கு நாள் ஓங்கி வளர்ந்தது. ஒரு முறை வாணன் பாண்டியன் ஒருவனை வெற்றிகொண்டான். அவ்வெற்றி பெறுதற் கரியதாயிருந்தது. அவன் அவையில் வாணனைப் பாராட்டி வாயாரப் புகழ்கிறார் கவிஞர்.

வாளேந்தியபெரும்படையையுடையவன்பாண்டிய மன்னன். அவனே மகதநாட்டிற்கு மன்னனாகிய வாணர் குலத்தரசனுக்குத் தோற்றான். மகதநாட்டு வீரர்கள் வெற்றிகொண்டதோடு நில்லாமல் மேலும் எங்காவது பகைவர் உண்டோ என்ற சினத்தோடு கூக்குரலிட்டுச் சென்றார்கள். இத் தோற்ற செய்தியையும் அத்திக்குரலையும் கேட்டான் கவலையோடு கூடியவனும் விழிகள் ஆயிரம் தன் மேனியில் பொருந்தியவனுமான இந்திரன். இங்கும் படைவீரர்கள் வந்து விட்டால் என்ன செய்வது! இவ்விண்ணுலகத்தின் கதி என்னவாகும்! என்று நினைத்துக் கவலையோடு தன்னுடைய பொன்முடியைச் சாய்த்துச் சோர்ந் திருந்தான் என்கிறார்.

குறிப்பு:- வாணன் புகழ் மண்ணுலகத்தையும் கடந்து விண்ணுலகம் வரை எட்டிற்று என்பதையும் அவன் வீரத்தை நினைந்த தேவர் தம் தலைவனின் கலக்கத்தையும் கூறுவதின் மூலம் வாணன் புகழை வானளாவப் புகழ்கிறார் கவிஞர்.

மாகதர் — மகதநாட்டை ஆண்ட வாணர் குலத்தரசர்.

மகதநாடு–மகதநாடு என்பது சேலம் மாவட்டத்தின் கீழ்ப்பகுதியையும் தென்னார்க்காடு மாவட்டத்தின் மேற்குப் பகுதியையும் தன்னகத்துக் கொண்டு முற்காலத்தில்

நிலவிய ஓர் உள்நாடாகும். இப்பொழுது ஆறகளூர் என்று வழங்கும் ஆறகழூரே அவன் தலைநகரமாகும். அந் நாட்டை அரசாண்டவர்கள் வாணகோவரையர் எனவும் வாணாதிராசன் எனவும் வழங்கப்பெற்ற குறுநில மன்னர் ஆவர்.

—பாண்டியர் வரலாறு: பக். 133.

ஆயிரவிழியான்—இந்திரன், தேவர்களுக்குத் தலைவன். இடியைப் படையாகக்கொள்பவன். இவன் வாகனம் ஐராவதம் என்னும் யானை. இவன் அகலியையிடம் நெறிதவறி நடந்தான். அதன் காரணமாக அவள் கணவர் கௌதம முனிவரால் மேனி முழுதும் ஆயிரம் விழிகளைப்பெறும் சாபத்தைப் பெற்றான்.

ஒப்புமை:-

நாமா னரவிந்த மான்விந்த மான்முடி.
நாகர்சென்னிப்
பூமான் விரும்பும் புகழ்மக தேசற்குப் போர்வழுதி
வாமான் திறையிட்ட அந்நாள் தொடங்கியவ்
வானவர்தம்
கோமான் தனதென் றிரான்அம ராவதிக்
குஞ்சரமே!

—பெருந்தொகை: பா. எண்: 1178.

இரண்டு பாடலும் திருவண்ணாமலை அருணாசலேச்சுவரர் கோயிற் சாசனத்திலுள்ளன என்கிறார் பெருந்தொகை ஆசிரியர்.

# 42

## மன்னவர் கோன்!

இழைத்த படியிதுவோ
வெங்கணு வென்றேன்
றழைத்த அழுகுரலே
ஆன—தழைத்தகுடை
மன்னவர்கோன் வாணன்
வடிவேலால் தோற்றுடைந்த
தென்னவர்கோன் போன
திசை! கக

குடுமியான்மலைக் கல்வெட்டு, புதுக்கோட்டை, உயர்திரு சா.கணேசன் அவர்களால் நல்கப்பெற்றது.

போர்க்களத்தில் பெருவீரம் தாண்டவமாடும் பொழுது மக்கள் கதறி அழுவது இயற்கைதானே! பாண்டியப் பேரரசு சிதறிற்று. பாண்டிய மன்னர்கள் குறுநில மன்னர்களாயினர். வாணர் குலத்தரசு வளர்ந்தோங்கியது. ஒரு முறை பாண்டிய மன்னன் மேல் படையெடுத்தான் மன்னவர்கோன் வாணன். வாணன் பெருவீரம் படைத்தவன். அவனுடைய வேற்படையோ மிகத்திறமை வாய்ந்தது. பாண்டியன் வாணனுடைய படைவலிக்கு ஆற்ருது பின்வாங்கினன். வாணனே விடாது முன்னேறிச்சென்ருன். முடிவில் பாண்டியன் தோற்ருன். அவனுடைய வீரர்கள் இறந்தனர். அவர்தம் மனைவிமார்கள் கதறி அழுகின்றனர். வாணனுடைய வெற்றித் திருநாளில் அவன் அவையில் பாடுகிருர் கவிஞர்.

அன்பும் அருளும் தழைக்கின்ற வெண்கொற்றக் குடையையுடையவன் மன்னர்களுக்கு மன்னனான நம் வாணர்குலமன்னன். அவனுடைய வடிவமைந்த வேற்

படைக்கு ஆற்ருது பின்வாங்கித் தோற்று அதனல் மனமுடைந்துபோனுன் பாண்டியவேந்தன். தோற்றுப் பின் வாங்கிச் சென்ற திசையானது, அவன் படை வீரரும் மற்றவர்களும் இறக்க அவர்தம் மனைவிமார் தத்தம் கணவன்மார்களை நினைந்து, எங்களைப் பிரிந்து எவ்விடத்துள்ளீர் ஐயோ! தீவினையே! வாழ்வற்ற நிலையைச் செய்தனையே! நீ செய்தது இது தானு! என்றென்று அவர்களை அழைக்கின்ற அழு குரல்களே கேட்பதா யிருந்தது! என்கிருர்.

குறிப்பு:- திசை முழுவதும் ஒரே அழுகுரலாயிருந்தது என்பதனல் பாண்டிய வேந்தன் படை, போர்ப் பயிற்சியும் வலிமையும் மிக்கது என்பதையும், அதனையே வாணன் .வென்றதனல் பெறுதற் கரிய பெருவீரம் பெற்றவன் வாணன் என்பதையும் கூறுகிருர் கவிஞர்.

தென்னவர்கோன் – பாண்டியன்

எங்கணு– (எ + கண் + ஆ)–

தத்தம் (கணவன்மார்களை நினைந்து) எவ் விடத்துள்ளீர் எனக் கூவி அழைத்தனர் அவர்தம் மனைவியர் எனக் கொள்க.

**மேற்கோள்:-**

பொங்கி எழுந்தாள் விழுந்தாள் பொழிகதிர்த்
திங்கள் முகிலோடுஞ் சேண்நிலங் கொண்டெனச்
செங்கண் சிவப்ப அழுதாள் தன் கேள்வனை
எங்கணு என்ணு இனைந்தேங்கி மாழ்குவாள்.

–சிலம்பு: துன்பமாலை; வரி 30.

எங்கணு – எம் கண் போன்ற கணவரே! என விளித்ததாகக் கொள்ளலும் பொருந்தும். இப்பொருட்கு (எம் + கண் + ஆ) எனப் பிரித்துக்கொள்க.

## 43

### மகிழ்வதேன்!

பேரரசர் தேவிமார்
பெற்ற மதலையர்தம்
மார்பகலம் கண்டு
மகிழ்வரே!— போர்புரிய
வல்லான் அகளங்கன்
வாணன் திருநாமம்
எல்லாம் எழுதலாம்
என்று! கஉ

—பெருந்தொகை; பா எண். 1182.

அன்று அரண்மனையில் விருந்து, மன்னனும் கவிஞரும் மற்றவர்களும் விருந்துண்டனர். பின் அரண்மனைப் பெண்டிர்களும், மன்னனும், கவிஞரும் ஒரு சேரக் குழுமி உரையாடிக் கொண்டிருந்தனர். அப்பொழுது மன்னனைக் குறித்து ஒரு பாடல் கூறுகிறார் கவிஞர்.

வாணன் போர்புரிவதில் பெரு வீரம் படைத்தவன். அவன் படை யெடுத்துவருகிறான் என்று சொன்னாலே போதும்! எல்லோருக்கும் அச்சம்தான் ஆகவே பெரிய பெரிய அரசர்களுடைய தேவிமார்கள் தாங்கள் தாங்கள் பெற்ற ஆண் குழந்தைகளின் மார்புகள் அகலமாயிருப்பதைக் கண்டு மகிழ்வார்கள்! ஏன் தெரியுமா? போர் புரிவதில் மிக வல்லவன். மேலும் களங்கமற்றவன்; தூயவன். அவனுக்கு உலக மக்கள் சூட்டிய பலப்பல பெயர்களுண்டு. அப்பெயர்கள் எல்லாவற்றையும் எழுதலாமே! அதற்கு ஏற்ற வண்ணம் மார்பு அகலமாயிருக்கிறதே என்றுஅதனைக் கண்டு மகிழ்வார்கள்! என்று பாராட்டுகிறார் கவிஞர்,

குறிப்பு:- அக்காலத்தில் வாணன் பெயரைச்சொல்லி யாவது தம் குழந்தை பிழைக்கட்டும் என்ற அச்சவுணர்வும், வாணன் திருநாமம் சொன்னுல் தம்மேல் படையெடுத்து வாராது நம்மைக் காப்பான் என்ற நம்பிக்கை யுணர்வும் பேரரசர்களுடைய தேவியர்தம் உள்ளத்தேயும் இருந்தது என்பதை உணர்த்துகிருர் கவிஞர்.

## 44

### எவ்வொலி பெரிது!

அரசன் அகளங்கன்
அச்சுதன்முற் றத்தில்
அரசர் அவதரித்த
அந்நாள்—முரசதிரக்
கொட்டிவிடும் ஓசையிலும்
கோவேந்தர் காற்றளையை
வெட்டிவிடும் ஓசை
மிகும்! கஙு

—கம்பர்: பெருந்தொகை: பா. 1003.

மன்னன் பிறந்த நாளென்ருல் பகைவர்களுக்கு விடுதலைப் பெருநாளல்லவா! அன்று அச்சுதமன்னன் பிறந்தநாள், அரசன் மனையிலும் மக்கள் மனையிலும் ஊர்முழுதும் ஒரே மகிழ்ச்சி. சிறைக்கதவுகள் திறக்கப் படுகின்றன. பகைவர்கள் விடுதலை செய்யப்படு கின்றனர். இவற்றையெல்லாம் கம்பர் பார்த்தார். அவருக்கு ஒரே மகிழ்ச்சி. பல நாட்கள் அங்குத் தங்கியிருந்தார். ஒரு நாள் மன்னனைப் பாராட்டும் வாய்ப்பு வந்தது. அப்பொழுது அவனைப் பாராட்டு கிருர் கவிஞர் பெருமான்,

நம்முடைய மன்னன் அச்சுதன் குற்றமற்றவன். அவன் பிறந்த நாளன்று பார்க்கவேண்டுமே! அவனுடைய மனைவாயிலில் கொட்டி முழங்குகின்ற முரசொலியைக் காட்டிலும் பெரிய பெரிய வேந்தர்கள் இருக்கிறார்களே, அவர்களுடைய கால்களில் பூட்டப் பெற்ற விலங்குகளை வெட்டிவிடும் ஓசை பெரிதா யிருந்தது! என்கிறார்.

குறிப்பு:- அச்சுதனுடைய அரசு விரப்பேரரசு என்றும், அவன் படைவலிமைக்கு ஆற்றாது பலப்பல மன்னர்கள் சிறைப்பட்டனர் என்றும் கூறு கிறார் கவிஞர்.

கம்பர்:- காவிரிநாடு என்று கூறப்படும் சோழ நாட்டில் மாயூரத்திற்கு அருகேயுள்ள திருவழுந் தூரிலே உவச்சர் குலத்தில் கம்பர் தோன்றி னார் என்பர். கம்பங்கொல்லையைக் காவல் புரிந்ததால் கம்பர் என்றும், கம்பநாடு என்ற நாட்டில் பிறந்தமையால் கம்பநாடன் என்றும், கம்பத்தின் அருகே கண்டெடுக்கப் பட்டமையால் கம்பர் என்றும், காஞ்சிபுரத்தில் கோயில் கொண்டுள்ள எகம்பனாகிய ஈசனது பெயரால் ஏகம்பன் கம்பனாயிற்று என்றும் இக் கவிஞருக்குக் கம்பர் என்ற பெயர் அமைந் ததைக் குறித்துப் பலர் பலவாறு பேசுவர்.

இவர் இயற்றிய நூல்கள் இராமாயணம், ஏரெழு பது, திருக்கை வழக்கம், சடகோபர் அந்தாதி, சரசுவதி அந்தாதி முதலியன. மேலும் தனிப்பாடல்கள் பல இயற்றியுள்ளார்.

இவர் சேதுநாடு எனவழங்கும் இராமநாதபுர மாவட்டத்திலுள்ள நாட்டரசன்கோட்டையில் சமாதி கொண்டார்.

•கலைக்களஞ்சியம்: தொகுதி மூன்று: பக்; 214,216,217

# 45

## மதியும் மதவேழமும்

மண்படுதோட் கிள்ளி
மதவேழ மாற்றரசர்
வெண்குடையைத் தேய்த்த
வெகுளியால்—விண்படர்ந்து
பாயுங்கொல் என்று
பனிமதியும் தன்னுருவந்
தேயும் தெளிவிசும்பில்
நின்று! கச

–தொல் பொருள்: பேராசிரியம் நூற்பா: 307. மேற்

தேய்பிறைக்காலம், ஒரு நாள் இரவு சோழ நாட்டு அரண்மனைப் பெண்டிர்களோடு கவிஞர் உரையாடிக் கொண்டிருந்தார். சோழனுடைய போர் வீரத்தைப் பற்றியும் மற்றவற்றைப்பற்றியும் சொல்லிக்கொண்டே வந்தார் கவிஞர். ஏன் இந்த நிலவு தேய்கிறது தெரியுமா? என்று இடையே ஒரு கேள்வியைப் போட்டுக்கொண்டு கவிஞர் மேலும் பேசுகிறார்.

இம் மண்ணுலகத்தைக் காக்கின்ற தோள் வலிமை மிக்கவன் நம்முடைய சோழமன்னன். அவனுடைய போர் யானையோ ஒருமுறை போரில் பகையரசர்களுடைய வெண்கொற்றக் குடையைச் சினத்தொடு தாக்கிற்று. குடையோ தேய்ந்து உருத்தெரியவில்லை. பின்னும் சினத்தொடு தலை நிமிர்ந்தது. இதைப் பார்த்த வானகத்திலுள்ள நிலவு எங்கே இந்த யானையானது தன்னையும் குடையாகஎண்ணி விண்ணோக்கிப் பாய்ந்து விடுமோ என்று பயந்து, அப்பயத்தால் அங்கே நின்று தன் உருவம் தேய்கின்றது. எவ்வளவு பயம் பார்த்தீர்களா என்கிறார் கவிஞர்.

குறிப்பு:- இயற்கையில் நிலவு வளர்ந்து தேய்தல் கண்கூடு. ஆனால் ஈண்டுக் கவிஞர் சோழனுடைய போர் யானையின் சினத்திற்குப் பயந்து நிலவு தேய்கிறது என்று கற்பனையாகக் கூறுவதின் மூலம் சோழன்பகைவர்தம் குடையழித்து வெற்றிகொண்ட வீரத்தையும், அவனுடைய போர் யானைகளின் பயிற்சி வீரத்தையும் தெளிவுபெறக் காட்டுகிறார். இதனை அணி நூலார் தற்குறிப்பேற்ற அணி என்பர்.

கிள்ளி – சோழர்களுக்குரிய சிறப்புப் பெயர்.

வெகுளி – சினம்

வேழம் – யானை

மதவேழம் வெகுளியால் பாயுங்கொல் என்று மதியும் தேயும் என்ற இக் கருத்து.

'வீறுசால் மன்னர் விரிதாம வெண்குடையைப்
பாற எறிந்த பரிசயத்தால் – தேறுது

செங்கண்மாக் கோதை சினவெங் களியானை
திங்கள்மேல் நீட்டுந்தன் கை! –முத். பா. 19.

என்ற முத்தொள்ளாயிரப் பாடலை நினைவூட்டுகிறது.

## 46

### யானைமறம்

கையது கையோ
    டொருதுணி கோட்டது
மொய்யிலைவேல் மன்னர்
    முடித்தலை—பைய
உயர்பொய்கை நீராட்டிச்
    செல்லுமே யெங்கோன்
வயவெம்போர் மாறன்
    களிறு! கரு

–தொல் பொருள்; நச்சி நூற்பா: 72 மேற்

வேற்று நாட்டு அரச தூதுவர்கள் பாண்டிய நாட்டிற்கு வந்திருந்தனர். தலைநகரையும் மன்னன் மனை முதலானவற்றையும் சுற்றிப் பார்த்தனர். பாண்டிய நாட்டுப் படைத்தலைவன் உடன்சென்று காண்பித்தான். அவர்களுடைய உள்ளத்தைப் பெரிதும் கொள்ளைகொண்டது மன்னனது போர்க் குரிய பட்டத்து ஆண்யானை, அதனைப் பெரிதும் வியந்து பார்த்துக்கொண்டே யிருந்தனர். அப்பொழுது அதன் மறத்தை எடுத்து இயம்புகிறான் படைத் தலைவன்.

மிகச் சாதாரணப் போரல்ல; வலிமைமிக்க கொடிய போர்க்களத்தே எங்கள் பாண்டியனுடைய ஆண் யானையின் திறத்தை நீங்கள் பார்க்கவேண்டுமே! பெருஞ் சினத்தொடு பகைவரைத் தாக்கும், வலிமை மிக்க இலைவடிவமைந்த வேலையுடைய பகை மன்னரைத் தாக்கும். தன் கொம்புகளால் அவர்களைக் குத்திக் கொன்று அவர் தம் முடித்தலையைக் கொம்பால் தூக்கிக்கொள்ளும், அவர் தம் கையைப் பிய்த்து

அத்துண்டைத் தன் துதிக்கையினிடத்துக்கொள்ளும், பிறகு தன் சினமடங்கப் பைய, உயர்ந்த பொய்கையினிடத்துச் சென்று தன் கையையும் கொம்பையும் நீரில் நனைத்துக் கழுவிச் செல்லுமே! என்கிறான்.

குறிப்பு:- எங்கோன் வயவெம்போர் மாறன்களிறு, மொய்யிலைவேல் மன்னர்முடித்தலை கோட்டது; கையோடொருதுணி கையது; பைய உயர்பொய்கை நீராட்டிச் செல்லுமே! எனக் கொண்டு கூட்டிக் கொள்க. கையது; கோட்டது—குறிப்பு வினைமுற்று.

## 47

### கிள்ளி களிறு

காவிமிர்ந்நால் கண்பரிப
    வல்லியோ புல்லாதார்
மானனையார் மங்கலநா
    ணல்லவோ — தான
மழைத்தடக்கை வார்கழற்கால்
    மானவேற் கிள்ளி
புழைத்தடக்கை நால்வாய்ப்
    பொறுப்பு! கசு

–தண்டி நூற்பா: 24 மேற்

கவிஞர் சோழநாட்டிற்கு வந்து சேர்ந்தார். ஒருநாள் மன்னனோடு அவன் யானைப் படைகளைக் காணச் சென்றார். எல்லாம் பார்த்து முடிந்தது. அங்குக் கூடியிருந்தவர்களிடம் அவன் யானை மறத்தை எடுத்தியம்புகிறார்.

நம் சோழ மன்னன் எப்பொழுதும் நேரம் காலம் பார்க்காது மழையைக் கொட்டுகிற மேகம் போன்று கொடை கொடுக்கும் பெரிய கையினையுடையவன்.

அவன் கால்களில் நீண்ட வீரக்கழல் விளங்கும். சிறந்த பெருமைமிக்க வேற்படையை யுடையவன். துளைகொண்ட பெரிய துதிக்கையும் தொங்குகின்ற வாயினையு முடைய மலையினை ஒத்த பெரிய அவனது யானையானது, கட்டியிருக்கும் தன் காலின் வளைவை நிமிர்த்து இழுக்குமேயானால் அதன் கால்களில் கட்டியிருக்கும் சங்கலியின் கணுக்கள் மட்டுமோ அறுபடும்! மானைப்போன்ற மென்மையும் அழகும் உடைய பகைவர் தம்பெண்டிர் தம் திருமணக் காலத்தில் கட்டிய மணக்கயிறும் அல்லவோ அறுபடும்! என்கிறார்.

குறிப்பு:- சோழன் வீரத்தின் உருவினன் என்றும், பகைவர் மேல் படையெடுப்பானே யானால் அவனது யானைப்படை மாற்றாரைக் கொன்று அவர்தம் மனைவியரைக் கைம்பெண்ணாக்கி வெற்றிகொள்ளும் வீரமிக்கது என்றும் பாராட்டுகிறார் கவிஞர்.

வல்லியோ கண்பரிப - யானையைக் கட்டி யிருக்கும் கால்களிலுள்ள சங்கிலியின் வளையம் மட்டுமா அறும் என்ப.

புல்லாதார் - பகைவர்
வார் - நீண்ட
கிள்ளி - சோழன்

புழைத்தடக்கை - துளை கொண்ட பெரிய துதிக்கை.

நால்வாய் - தொங்குகின்ற வாய்.

## 48

### யானையின் பின்!

படுபருந்தும் சூர்ப்பேயும்
பல்விலங்கும் செந்நாய்
கொடிகழுகும் இன்னவெலாங்
கூடி—வடிவுடைய
கோமான் களப்பாளன்
கொல்யானை போமாறு
போமாறு போமாறு
போம்! கஎ

–பெருந்தொகை: பா. எண்: 522

நண்பர் ஒருவர் வாழ்ந்தார். அவர் வந்துவிட்டால் உடனே குழந்தைகள் எல்லோரும் அவரைச் சூழ்ந்து விடுவர். எப்பொழுதும் அவர் குழந்தைகளுக்கு இடையேதான் வீற்றிருப்பர். குழந்தைகளுக்கு அத்துணை ஈடுபாடு அவரிடத்தில்! காரணம் எப்பொழுதும் அவர் தம் பையில் மிட்டாய்களை நிறைய வாங்கி வைத்திருப்பார். அவர் சாப்பிடுவதற்கல்ல. குழந்தைகளுக்குப் பாடல் ஒன்று சொல்லிக்கொடுத்து மிட்டாய் ஒன்றும் கொடுப்பதற்கு! ஆகவே குழந்தைகளுக்கோ அவரைக் கண்டால் போதும். பாடலும் மிட்டாயும் உறுதியாய்க் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் அவரை உடனே சூழ்ந்துவிடுவர். களப்பாளன் என்ற மன்னன் பெருவீரம் படைத்தவன். அவனுடைய போர்க்குரிய பட்டத்து யானையோ வீரமே அதன் உருவாய் அமைந்ததுபோன்று போர் செய்யும் ஆற்றல் மிக்கது. அது போருக்குப் புறப்பட்டால் போதும். உடனே மிட்டாய்க்காகச் சூழும் குழந்தைகளைப்போல் உணவு கிடைக்குமென்ற நம்பிக்கையில் பருந்தும் பேயும் சூழ்ந்து விடும். ஒருமுறை கவிஞர் ஒருவர் மன்னனைக் காணச்சென்றார். பரிசில் பல பெற்றார். மன்னனையும்

அவன் யானையின் திறத்தையும் அங்குக் குழுமியிருந்தவர் பால் கூறிப் பாராட்டுகிறார் கவிஞர்.

நல்ல வடிவமைந்த கோமான் நம் களப்பாளன். போரில் பகைவரைக் கொன்று குவிக்கும் ஆற்றல் வாய்ந்தது அவனுடைய போர்க்குரிய பட்டத்து யானை, அது வெளியே புறப்பட்டுப்போகும் வழி தோறும் விடாது தொடர்ந்து பெரிய பருந்துகளும், அச்சத்தை விளைவிக்கக் கூடிய பேய்களும், செந்நாய் களும், கொடுமைமிக்க கழுகுகளும் இன்னும் வெறுக்கத்தக்க பலவகை மிருகங்களும் எங்கிருந்தோ வந்து ஒன்று கூடிப்போகும்! என்கிறார்.

குறிப்பு:- யானை வெளியே புறப்படவேண்டியதுதான். அது எத்திசையில் செல்லுகிறதோ அத்திசை தோறும் விடாது தொடர்ந்து, தங்களுக்கு உணவு உறுதியாய்க்கிடைக்கும் என்ற ஆசையில் விலங்குகள் செல்லும் என்று கவிஞர் கூறுவதன் மூலம், களப்பாளன் ஆற்றல்மிக்க யானைப்படையை உடையவன் என்பதும், அவன் செல்லும் வழியனைத்திலும் வெற்றி ஒன்றைத் தவிர வேறு அறியாதவன் என்பதும், வீரமிக்கவன் என்பதும் பெறப்படும்

:ıடு—பெரிய

சூர்—அச்சம்

போம் ஆறு—போகும் வழி தோறும்.

# 49

## இலங்கைப் பரிசு

கொங்கர் உடல்கிழியக்
குத்தியிரு கோட்டெடுத்து
வெங்கண் அழலில்
வெதுப்புமே—மங்கையர்கண்
சூழத்தா மம்புனையுஞ்
சுந்தரத்தோள் மீனவனுக்
கீழத்தா னிட்ட
இறை! கஅ

–பாண்டியர் வரலாறு: பக்: 222,

பாண்டியரைப்பற்றிய கல்வெட்டுப் பாடல்,

முதல் சடையவர்மன் சுந்தரபாண்டியன் சோழனையும் போசளமன்னனையும் வென்றான். பின் இலங்கைக்குப் படையெடுத்துச் சென்று அம்மன்னனையும் வெற்றி கொண்டான். பாண்டியனது பண்பும் பெருவீரமும் இலங்கையரசனைக் கவர்ந்தன. தனது மிக உயர்ந்த பட்டத்துப்போர் யானையோடு மற்ற யானைகளையும் பல வகை மணிகளையும் கப்பமாக அளித்தான். கப்பத்தைப் பெற்று வெற்றியோடு ஊர் திரும்பினான் மன்னவன். வரும்பொழுதே கொங்கு நாட்டைக் கைப்பற்றவேண்டும் என்ற கருத்தோடு திரும்பி வந்தான், ஆனால் ஊர் திரும்பிய மன்னனுக்கு அவன் நாட்டவர் வெற்றி விழாக் கொண்டாடினர். வெற்றித் திருநாளன்று விழாவில் பாண்டிய மன்னனின் வீரப்புகழையும் ஈழத்துமன்னன் தந்த கப்பப் பொருளாகிய யானையின் வீரத்தையும் ஒரு சேரப் பாராட்டி வாழ்த்துகிறார் கவிஞர்

மங்கையர்களுடைய கண்கள் எப்பொழுதும் பாண்டியனுடைய அழகைப் பருகச் சூழ்ந்துகொண்

டிருக்கும். அப்படி அவர் தம் கண்கள் சூழப் பூமாலையை அணியப் பெற்றவன் நம் பாண்டிய மன்னன். அழகிய தோளமையப் பெற்றவன். மதிப்பிற் குரிய ஈழத்தரசன் அவனுக்குக் கப்பப் பொருளாகக் களிறு ஒன்றைக் கொடுத்தனன். அக் களிறு நம் பகைவர்களான கொங்கு நாட்டுப் போர்வீரர்களைப் பெருஞ் சினத்தோடு தாக்கித் தன்னுடைய இரு கொம்புகளினாலும் குத்தி அவர்கள் உடலைக் கிழித்துத் தீவிழி விழித்து வெதுப்பும்! என்கிறார்.

குறிப்பு:- யானையின் விரத்தைப் பாராட்டுவதின் மூலம் ஈழத்தானையும் மதித்துப் பாண்டியன் புகழ் பாடுகிறார் கவிஞர்.

தாமம்-பூமாலை

மீனவன்-பாண்டியன்

**முதல் சடையவர்மன் சுந்தரபாண்டியன்:-** இவன் கி. பி. 1251-ஆம் ஆண்டில் முடிசூட்டப்பெற்று, இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் இறந்த பிறகு பாண்டியநாட்டை ஆட்சி புரிந்தவன். சித்திரைத் திங்கள் மூல நாளிற் பிறந்தவன். இணையற்ற பெருவீரன், பாண்டிய அரசை யாண்டும் பரப்பி மிக்க உயர் நிலைக்குக் கொணர்ந்த பெருவேந்தன்,

இச் சுந்தரபாண்டியன் இலங்கை அரசனை வென்று, அவன்பால் யானைகளையும் பலவகை மணிகளையும் கப்பமாகப் பெற்றான்.

பின்னர், இவ்வேந்தன் வாணவர்களுடைய மகத நாட்டையும், கொங்கு மன்னர்களின் கொங்கு நாட்டையும் கைப்பற்றித் தன் ஆட்சிக்குள்ளாக்கினன்,

-பாண்டியன் வரலாறு: பக் 128, 132

கொங்குநாடு:- பண்டைத் தமிழகத்திலிருந்த நாடுகளில் ஒன்று. இது இன்றைய கோயம்புத்தூர் சேலம் மாவட்டங்களடங்கிய நிலவெளியாகும். இதைப்பற்றிய தனிப்பாடல்களையும் கொங்கு மண்டல சதகத்தையும் கொண்டு நோக்குமிடத்துக் கொங்குநாடு என்பது மேற்கே வெள்ளி மலை, நீலகிரி மலைகளுக்கும், வடக்கே தலைமலை, பிளிகிரி ரங்கன் மலை, மாதேசுவரன் மலை, தொப்பூர் மலை என்ற மலைகளுக்கும் தெற்கே பழனிமலைகளுக்கும், கிழக்கே சேர்வராயன்மலை, பச்சைமலை, கொல்லி மலை, என்ற மலைகளுக்கும் இடையிலுள்ள சமநிலமாகும்

–கலைக்களஞ்சியம்: தொகுதி நான்கு: பக் 229

## 50

### தளைநீக்கியதேன்!

இன்னம் கலிங்கத்
நிகல்வேந்நர் உண்டென்றோ
தென்னன் தமிழ்நாட்டைச்
சீறியோ—சென்னி
அகளங்கா! உன்றன்
அயிரா வதத்தின்
நிகளங்கால் விட்ட
நினைவு! கக

–ஒட்டக்கூத்தர்: தமிழ் நாவலர் சரிதம்: 126

வாழ்வின் பயனே போரில் வெற்றி பெறும் வீரந்தான் என்பது அக்கால வீரர்களின் குறிக்கோள். போரில் பெற்ற வெற்றியை மன்னரும் மக்களும் நினைந்து ஆண்டுதோறும் கொண்டாடுதல் வழக்கம், அன்றும் வழக்கம் போல் கொண்டாடினர். சோழ

நாட்டின் தனிப்பெருங் கவிஞர் ஒட்டக் கூத்தரல்லவா! அன்று அவர் வெருபெருமிதத்தோடு அரண்மனைக்கு வந்தார். மன்னன் அமரும் போர்யானையைப் பார்த்தார் கவிஞர். பழைய நிகழ்ச்சிகள் நினைவுக்கு வந்தன, மன்னனை நோக்கிக் கூறுகிறார் கவிஞர்.

சோழனே! அகளங்கா! இன்று உன் யானையாகிய அயிராவதத்தின் கால்களின் சங்கிலிகள் களையப் பெற்று அலங்கரிக்கப் பெற்றிருக்கின்றனவே எந்த நினைவில்! ஒரு வேளை இன்னும் கலிங்கப்பகுதியில் பகைவேந்தர் யாரேனும் உளரோ! அதனாலோ! அல்லது பாண்டியன் ஆளுகிற தமிழ்ப்பகுதிவை வெற்றிபெற எண்ணிச் சினந்தோ! யாதாலோ! என்று கூறி வாழ்த்துகிறார்.

குறிப்பு:- யானையின் கால்களின் தளை நீக்கப்பட்டிருப்பதால் நீ எப்பகுதியின்மேல் படையெடுக்கப் போகிறாய் என்று கேட்கும் குறிப்பில் போரிட்டு வெல்லும் திறம் வாய்ந்தவன் சோழன் என்பதும், அவனது யானைப்படை பலமிக்கது என்பதும் பெறப்படுகின்றன

இகல்—பகை

தென்னன்—பாண்டியன்

நிகளம்—யானையின் கால்களில் கட்டும் சங்கிலி.

ஒட்டக்கூத்தர்:- இவர்தம் இயற்பெயர் கூத்தர் என்பது. மலரி என்னும் ஊரில் பிறந்தவர். செங்குந்த மரபினர். சிவபக்தி உடையவர். செய்யுள் இயற்றும் ஆற்றல் மிக்கவர். விக்கிரமசோழன் உலாவிலுள்ள ஒரு கண்ணியை ஒட்டி ஒரு செய்யுள் பாடும்படி வேந்தன் கூற, அவ்வாறே விரைந்து பாடியமை பற்றி இப்புலவர் ஒட்டக்கூத்தர் என்று வழங்கப் பெற்றனர்.

இவர், முதற் குலோத்துங்க சோழனுடைய புதல்வன் விக்கிரம சோழனுக்கு அவைக்களப் புலவராகவும், அவன் மகன் இரண்டாங் குலோத்துங்க சோழனுக்கும், அவன் புதல்வன் இரண்டாம் இராசராச சோழனுக்கும் தமிழாசிரியராகவும் அவைக்களப் புலவராகவும் விளங்கி நெடுங்காலம் வாழ்ந்தவர்.

இவ்வாறு சோழ மன்னர் மூவர்க்கும் அரசவைப் புலவராக விளங்கிய இக்கவிஞருக்குக் கௌடப்புலவர், கவிச்சக்கரவர்த்தி, காளக்கவி, சருவஞ்ஞகவி என்னும் சிறப்புப் பெயர்கள் அக்காலத்தில் வழங்கி வந்தன.

இவர் இயற்றிய நூல்களாவன;- விக்கிரம சோழனுலா, கலிங்கப்பரணி, அரும்பைத் தொள்ளாயிரம், குலோத்துங்க சோழன் பிள்ளைத்தமிழ், குலோத்துங்க சோழனுலா, இராசராச சோழனுலா, தக்கயாகப்பரணி, காங்கேயன் நாலாயிரக் கோவை முதலியன.

—கலைக்களஞ்சியம்: தொகுதி இரண்டு: பக்கம்: 654.

## 51

### குதிரை மறம்

சாலியரி சூட்டான்
மடையடைக்கு நீர்நாடன்
மாறு மழைத்தடக்கை
மாவளவன்—காலியன்மா
மன்னர் முடியுதைத்து
மார்பகத்துப் பூணுழக்கிப்
பொன்னுரைகற் போன்ற
குளம்பு ! ௨௦

—தொல்: பொருள்: நச்சி நூற்பா: 86: மேற்

ஒரு முறை சோழன் பெரும் போர் செய்தான். வலிமையுடைய வேந்தர் பலர் எதிர்த்தனர். முடிவில் சோழன் வெற்றிபெற்றான். சோழனோடு உடன் சென்ற படைத்தலைவன் குறுநில மன்னன் ஒருவனிடம் சோழனுடைய வீரத்தையும் அவன் குதிரைப் படையின் திறத்தையும் எடுத்துக்கூறிப் பாராட்டுகிறான்.

வயலில் செந்நெல்லை அறுவடை செய்வார்கள். பின் அவற்றைக் களத்தில் போட்டு அவற்றின்மேல் காளைகளை விட்டு உழக்கி மணிகளை உதிரச் செய்வார்கள். மணி உதிர்ந்த அந்தத் தாள் வைக்கோல் எனப் பெயர்பெறும். அந்த வைக்கோலைப் போர் போராகக் கட்டி, அவற்றைக் கொண்டே நீர் மடைகளை அடைக்கும் அத்துணை நீர் வளமிக்க நாட்டிற்கு மன்னர் மன்னன் நம் சோழ மன்னன். மழைதான் கொட்டு கொட்டென்று கொட்டுகிறதோ என மயங்குமளவுக்குக் கொடையளிக்கும் கையினையுடையவன் பெரிய சோழமன்னன். அவனுடைய குதிரைப்படையைப்பற்றியோ சொல்லவே வேண்டுவதில்லை. அக் குதிரைகள் காற்றைப்போல விரைந்து செல்லும் தன்மையுடையன. அவை போர்க்களத்தில் செல்வதைப் பார்க்கவேண்டுமே! பகை மன்னர்களது தங்க முடிகளை அப்படி அப்படியே உதைத்து உதைத்துத் தள்ளிக்கொண்டே சென்றன. பின் அவர்களுடைய தங்கப்பூண் அமைந்த மார்புகளைத் தாக்கி அப் பூண்களை உடைத்து விட்டன. அப்பொழுது பார்க்க வேண்டுமே அவற்றின் கால்களை! தங்க முறைக்கும் கட்டளைக் கற்களைப் போன்று காட்சியளித்தன அந்தக் குளம்புகள்! என்று வியந்து பாராட்டுகிறான்.

குறிப்பு:- சாலி – செந்நெல்

சூடடித்தல்–அறுத்த கதிர்களைக் களத்தில் ஒன்று சேர்த்துக் காளைகளை விட்டு ஓட்டி நெல்மணிகளை உதிரச் செய்தல்.

'சாலியரி சூட்டான் மடையடைக்கும் நீர் நாடன்'- பயிர் வளருங்காலத்து நீர் நிறைந்து ஓடுதல் இயற்கை. ஆனால் சோழ நாட்டில் நெல் அறுத்த பின்னரும் நீர் நிறைந்து வழிந்து ஓடுகிறது. அத்துணை நீர்வளமிக்கது என்றும், வைக்கோலினால் மடையடைத்தலால் அத்துணை நெல் வள மிக்கது என்றும் நாட்டைப் பாராட்டுகிறார் கவிஞர்.

கால்+இயல்+மா — காலியன்மா - காற்றைப் போலக் கடுகிச்செல்லும் குதிரை.

சோழனது நாட்டு வளத்தையும், கொடைப் பண்பையும், அவனது குதிரைப்படையின் வலிமை யையும் ஒரு சேரப் பாராட்டிப் புகழ்கிறார் கவிஞர்.

## 52

### நடுகல் வாழ்த்து

ஆவாழ் குழக்கன் றாய்
    வித்துக் களத்தவிந்த
நீவாழ வாழிய
    நின்னடுகல் — ஓவாத
விற்கோட்ட நீண்டதோள்
    வேந்தன் புலிபொறித்த
பொற்கோட் டிமயமே
    போன்று ! ௨௧

—தொல் பொருள் நச்சி: நூற்பா 60 மேற்.

சோழப் பேரரசு வளர்ந்தோங்கி வாழ்ந்த காலம். ஒன்று வெற்றி பெறுவது அல்லது போர்க்களத்தில்

இறப்பது என்பதை உயிர்க்கொள்கையாகக்கொண்ட வீரர்கள் நிறைந்தது சோழநாடு. ஒரு முறை சோழ மன்னன் பகை மன்னன் ஒருவனோடுபோர் புரிந்தான். அப்பொழுது சோழப் படையின் தளபதியாக வீற்றிருந்து போரை நடத்தியவன் ஒரிளைஞன். வெகு திறமையாகப் போரை நடத்தி வெற்றி பெற்றான். ஆனால் அந்தோ வெற்றிப் புகழின் உயர்வைக் காணாது விதியின் காரணமாகக் களத்திலே பகைவர் தாக்க உயிர் நீத்தனன். வெற்றி கொண்டாடப் பெற்றது. ஆனால் மன்னனும் மக்களும் தளபதி இறந்தமைக்குப் பெரிதும் வருந்தினார்கள். அன்றே சோழர் தலைநகரின் உயர்ந்த ஓரிடத்தில் நடுகல் ஒன்று அமைத்து அந்தத் தளபதியின் நினைவாக விழாவெடுத்தனன் மன்னன். மன்னனும் மக்களும் அந்த நடுகல்லின்முன் நின்று அவனது உயிர் அமைதிபெற மௌனமாக வேண்டினர். பின் மன்னனோடு வந்த கவிஞர் நடுகல்லை நோக்கி வாழ்த்தொன்று கூறுகிறார்.

நம் சோழ மன்னனுடைய மரபில் தோன்றிய சோழமன்னன் ஒருவன் நீண்ட தோளைப்பெற்றவன். எப்பொழுதும் அத்தோளைவிட்டு நீங்காத வளைந்த வில்லையுடையவன். அவ்வேந்தன் வடநாடு முழுமையும் வென்று இமயம்வரை சென்ற அங்குத் தங்கள் சின்னமாகிய புலிக் கொடியை நாட்டினன். அந்தப் புலி பொறித்த பொன்மயமான இமயமலையே போன்று நீ வாழ்வாயாக! பாலூட்டி வளர்த்த தன் கன்றை வாழவைத்து விட்டு இறந்த பசுப் போல எங்களை விட்டு நீ மறைந்தனை! நீ வாழ-உன் நினைவெழுப்பும் இந்த நடுகல் நீடூழி வாழ்வதாகுக! என்கிறார்.

குறிப்பு: ஆவாழ்- பசுவினால் பாலூட்டி வளர்க்கப்பெற்ற

ஓவாத—நீங்காத,

பொற்கோட்டிமயமே போன்று வாழிய—என்ற

வாழ்த்து 'நடுக்கின்றி நிலியரோ ............
பொற்கோட்டிமயமும் பொதியமும் போன்றே'
என்ற புறநானூற்று (பா–2) அடிகளை
நினைவூட்டுகிறது.

## 53

### கொடி

சென்னி புலிக்கொடியும்
தென்னன் கயற்கொடியும்
மின்னும் கழற்பிறையோன்
விற்கொடியும்—மன்னும்
வரிசை கொடைத்திருமால்
மாவலிவா ணன்தன்
கருடக் கொடிக்கொடியாம்
காண்! உஉ

உயர் திரு. சா. கணேசன் அவர்கள் நல்கியது
வாணர்களைப்பற்றிய கல்வெட்டுப் பாடல்,

கொடி வணக்கம் என்பது தொன்று தொட்டு நம் நாட்டில் நிகழ்ந்து வரும் விழா. அன்று மகதநாட்டில் கம்பீரமாகப் பெருமிதத்தோடு பறந்துகொண்டிருந்தது. கருடக்கொடி. மன்னனும் மக்களும் எல்லோரும் அன்று குழுமிக் கொடிக்கு வணக்கம் செலுத்தினர். நம் கவிஞரும் வந்திருந்தார். கொடிவணக்கம் முடிந்தவுடன் அருமையானதொரு பாடலைக் கூறுகிறார் கவிஞர்.

நம்மதிப்பிற்குரிய மன்னன் மாவலிவாணன் திருமால் மரபினன். நிலைத்த புகழுக்குரிய மேம்பாடுடையவன். கொடைஞன். அவனுடைய இக் கருடக் கொடிக்கு முன் சோழனுடைய புலிக்கொடியும், பாண்டியனுடைய மீனக் கொடியும், மின்னுகின்ற வீரக்கழல் அணிந்த சேரனுடைய விற்கொடியும் தம் வலி குன்றித் தாழ்ந்து கெடும் காண்பீர்களாக! என்கிறார்.

குறிப்பு:- சேர சோழ பாண்டியர் மூவரும் மாவலிவாண னுக்கு நிகராகார் எனவும், அவன் ஒப்புயர் வற்ற மன்னனாய் அக்காலத்து விளங்கினு னெனவும் சுட்டுகிறார் கவிஞர்.

வரிசை — நிலைத்த புகழுக்குரிய மேம்பாடு.

ஓடியாம்காண் — வலிகுன்றித் தாழ்ந்து கெடும் காண்க!

பிறையோன் - ஈண்டுச்சேரனைக் குறிக்கும்.

மாவலிவாணன்:- வாணர் என்பார், பாலாற் றுக்கு வடக்கே சித்தூர் ஜில்லா வரையில் அமைந்த நிலப்பரப்பாகிய வாணகம்பாடி நாட்டைப் பண்டைக் காலத்தில் ஆட்சி புரிந்த ஓர் அரச மரபினர் ஆவர். அன்னோர் வல்லம், வாணபுரம் என்ற நகரங்களைத் தம் தலைநகரங்களாகக் கொண்டு இரண்டு நூற்றாண்டுகள் அப்பகுதியில் ஆட்சி புரிந் தனர். அவர்கள் மாபலியின் வழியில் வந்த வர்கள் என்று தம்மைக் கூறிக்கொள்வதைப் பல கல்வெட்டுக்களிற் காணலாம்.

—பிற்காலச் சோழர் சரித்திரம் பக்: 43.

## 54

### மாவேந்தனும் பாவேந்தரும்

என்கவிகை என்சிவிகை
என்றுவசம் என்கவசம்
என்கரியி தென்பரியி
தென்பால்—மன்கவன
மாவேந்தன் வாணன்
வரிசைப் பரிசுபெற்ற
பாவேந் தரைவேந்தர்
பார்த்து! ௫௪

—பெருந்தொகை: பா. எண். 1187.

வாணனுக்கு உட்பட்ட குறுநில மன்னனுடைய அரண்மனைக்கு வந்து சேர்ந்தார் கவிஞர். அரசன் அவரைப் பெரிதும் வரவேற்ருன். உணவருந்திப் பின் வேந்தனும் கவிஞனும் உரையாடிக்கொண்டிருந்தனர். வாணனைப்பற்றிய பேச்சு நிகழ்ந்தது. அப்பொழுது கவிஞர் முன் நடந்த நிகழ்ச்சி ஒன்றை வேந்தனுக்குக் கூறுகிருர்.

ஒரு முறை வாணன் பெரும்படையுடன் புறப்பட்டான். பலப்பல நாடுகளுடன் போர் செய்து அந்நாடுகளையெல்லாம் வெற்றி கொண்டான். பின் மறுதிசையிற் சென்ருன். அங்கும் வெற்றிகொண்டான். இப்படிப் பல பக்கங்களிலும் சென்று ஏராளமான நாடுகளையும் வென்று அங்கங்கே அந்தந்த அரசர்களிடமிருந்து பல பொருள்களைக் கைப்பற்றிக் கொண்டான். பின் ஊர் திரும்பினுன். மக்கள் அவன் வருகையறிந்து வெற்றிவிழாக் கொண்டாடினர். பின் மன்னன் தான் வெற்றிகொண்ட வேந்தர்கள் எல்லோரையும் தன்னகருக்கு அழைத்தான்.

அழைத்து விருந்து வைத்தான். மறுநாள் கொலு விற்றிருந்து தான் கைப்பற்றிய பொருள்களைப் புலவர்களுக்கு ஈந்தான். எல்லாவேந்தர்களும் குழுமியிருந்தனர். அப்பொழுது பார்க்கவேண்டுமே!

பெருமைவாய்ந்த நம் வேந்தன் வாணன் பெரும் படையையுடையவன். அவனுடைய சிறப்புப் பரிசை அவனிடம் ஒவ்வொரு புலவராகப் பெற்றுக்கொண்டே வந்தனர். பெற்றுக்கொண்டுவந்த பரிசுகளைப் பார்த்துக்கொண்டிருந்த வேந்தர்களில்ஒருவர் இதோ இவர் கொண்டு செல்லும் பரிசு என்னுடைய வெண்கொற்றக்குடை என்பார். இன்னொருவர் இதோ இது என்னுடைய பல்லக்கு என்பர். அடுத்தொருவர் இது என்னுடைய கொடி பொறித்த சின்னம் என்பார். இது என்னுடைய பட்டத்துயானை என்பார் வேறொருவர். அருகிருந்த வேந்தர் ஒருவர் இது என்னுடைய பட்டத்துக் குதிரை என்றுரைப்பார். இப்படியாக ஒவ்வொரு வேந்தரும் பாவேந்தர் கொண்டுசெல்லும் கொடைப் பொருளைப் பார்த்துத் தத்தம் பொருளைச் சுட்டிப் பக்கத்திருந்தவர்களிடம் கூறியதைக் கேட்க வேண்டும்! என்று கூறினர்.

குறிப்பு:— வாணன் போரில் வல்லவன் என்றும், பல நாட்டு வேந்தரையும் வெற்றிகொண்டான் என்றும், அவர்பால்கொண்ட பொருள்களைப் புலவர்களுக்கு ஈந்து மகிழ்ந்தான் என்றும் அவன் வீரத்தையும் கொடையையும் வியந்து பாடுகிறார் கவிஞர்.

கவிகை—வெண்கொற்றக்குடை
சிவிகை—பல்லக்கு
துவசம்—கொடி
கவசம்—போர்க்குரிய இருப்புச்சட்டை
கரி—யானை
பரி—குதிரை
கவனம்—படை

# 55

## சோழன் பண்பு

சேர்ந்த புறவின்
 நிறைதன் திருமேனி
ஈர்ந்திட் டுயர்துலைதான்
 ஏறினன்—நேர்ந்த
கொடைவீர மோமெய்ந்
 நிறைகுறையா வன்கண்
படைவீர மோசென்னி
 பண்பு! உச

—தண்டி: நூற்பா: 70: மேற்

அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்! என்று கேட்கிறார் திருவள்ளுவர். அன்பிற்கு உயர்திணை அஃறிணை என்பதெல்லாம் இல்லை. ஆறறிவின் படைப்பென்றும் அல்லாதவை என்றும் கிடையாது. உள்ளத்துள் எழுகின்ற அன்புணர்ச்சி, காணுகின்ற இயற்கைப் பொருளிடத்தும் விலங்கினிடத்தும் தன்னையறியாது பெருகி நிற்கும். சோழநாடு தந்த சிபிச் சக்கரவர்த்தி ஒரு புறுவுக்காகப் பெரிதும் வாதாடினான். பிறகு தன்னையே ஈந்தான். அவன் வழிவந்த சோழ மன்னன் ஒருவனைப் பாராட்டுகிறார் கவிஞர்.

ஒருமுறை சோழனிடம் என்னைக் காப்பாற்று என்று அடைக்கலப் பொருளாக ஒரு புறு வந்து சேர்ந்தது. அதைக் காக்க, அப்புறவின் எடைக்குச் சரியாகத் தன் அழகு மேனியினின்றும் சதையை அறுத்துவைத்தும் எடைநேராகவில்லை. உடனே தானே அந்தத்தராசில் ஏறினன். இப்படித் தன்னையே ஈந்த தன்மை அவன் குலத்தின் வழிவழியாக வந்த கொடைவீரமோ! இல்லை உண்மையான நெறி

குறையாத வீரப் பயிற்சியில் விளைந்த படை வீரமோ! இந்தச் சோழனது பண்பு என்கிறார்.

குறிப்பு:- உண்மையில் சோழன் கொடைப்பண்பும் வீரப்பண்பும் மிக்கவன். இதைப்பாராட்ட வந்த கவிஞர் முன்னாளில் தன்னையே ஈந்த கொடை வள்ளல் சிபியின் வழிவந்த கொடைப்பண்பு என்று சோழகுல முன்னோரையும் தான் நாடிவந்த மன்னனையும் உளமாரப் பாராட்டி மகிழ்கிறார். முன்னோர் பெருமையை அவர்கள் வழிவந்த ஒருவரின் மேல் ஏற்றி உரைத்தல் மரபு.

எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்பப்
புள்ளுறு புன்கண் தீர்த்தோன்.

–சிலப்பதிகாரம்: மதுரைக் காண்டம்: வழக்குரை கதை: அடி 51, 52

இவ்வடிகளில் யாரையோ நீ எனக்கேட்ட மன்னன் கேள்விக்குக் கண்ணகி தன் நாட்டு முன்னோர் பெருமையைத் தன் மன்னன்மேல் ஏற்றியுரைத்தமை காண்க.

கதைக் குறிப்பு:- சோழர் குலத்துதித்த பெருங் கொடைவள்ளல் சிபிச்சக்கரவர்த்தி. அவரைச் சோதிக்கும் பொருட்டு இறைவன் பருந்தாகி ஒரு புறவை விரட்ட, அது அடைக்கலப் பொருளாக மன்னனிடம் வந்தது. மன்னன் பருந்தினிடம் புறவின் எடைக்குச் சரியாகத் தன் மேனியினின்றும் சதையைத் தருவேன் என்றுகூறப் பருந்து சரி என்றது. உடனே தராசில் தன் சதையை அறுத்து வைத்தும் எடை நேராகாதது கண்டு தானே அத்தராசில் ஏறிப் புறவைக் காத்த கதை.

ஈர்தல்—அறுத்தல்
துலை—தராசு
சென்னி—சோழன்

ஒப்புமை:-

தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
தபுதி அஞ்சிச் சீரைபுக்க
வரையா ஈகை உரவோன் மருக!

- புறநானூறு: பா 43.

## 56

### சோழன் செல்வம்

கன்றும் வயவேந்தர்
செல்வம் பலகவர்ந்தும்
என்றும் வறிஞர்
இனங்கவர்ந்தும்—ஒன்றும்
அறிவரிதாய் நிற்கும்
அளவினதால் அம்ம
செறிகதிர்வேற் சென்னி
திரு! ௫

- தண்டி: நூற்பா 74: மேற்.

பெரும் பணம் படைத்தவர்களிடையே ஒரு பக்கம் செல்வம் குவியும்; மறுபக்கம் அது செலவாகிக் கொண்டேயிருக்கும். அவர்கள் எவ்வளவு பணம் படைத்தவர்கள் என்று சொல்லமுடியாமல் வரவு செலவு நடக்கும். இதை நாம் வாழ்க்கையில் காணலாம். சோழனது செல்வமும் அத்தகையதுதான் என்று பெரிதும் மகிழ்ச்சியோடு சிற்றரசன் ஒருவனிடம் கூறுகிறார் கவிஞர்.

நிறைந்த ஒளி உமிழும் வேற்படையையுடையவன் நம் சோழமன்னன். அவனது சின எழுச்சிக்குஆளான வலிமைமிக்க பகைவேந்தர் அவனிடம் தோல்வியடைவதால், அவர்கள் செல்வத்தோடு சேர்ந்து அவனுடைய

செல்வம் பெருகுகிறது. ஆனால் அவனோ வறுமை வாய்ந்தவர்களுடைய இனத்தைப் பெரிதும் கவர்கிறான் தன் கொடையால்! அதனால் செல்வம் குறைகிறது. ஆகவே அவனது செல்வத்தை அளந்து இவ்வளவு தான் என்று அளவிடல் அரிதாயிருக்கிறது அம்ம! என்கிறார்.

குறிப்பு:- சோழனின் வீரத்தால் வந்து மிகுந்த செல்வம் அவனது நெஞ்சின் ஈரத்தால் குறைகிறது என அவனது வீரத்தையும் நெஞ்சின் ஈரத்தையும் உளமாரப் பாராட்டுகிறார் கவிஞர்.

கன்றல்—சினங்கொண்டு எழுதல்
வறிஞர்—வறுமைப்பட்டவர்
சென்னி—சோழன்
அம்ம!—வியப்பிடைச்சொல்.

ஒப்புமை:-

... ... ... ... இரவல
யாம் தன் னிரக்குங் காலைத் தான்எம்
உண்ணா மருங்குல் காட்டித் தன்னூர்க்
கருங்கைக் கொல்லனை யிரக்கும்
திருந்திலை நெடுவேல் வடித்திசின் எனவே;

-புறநானூறு: பா. எண்: 180.

## 57

### உறந்தையார் கொடை

செருமான வேற்சென்னி
　　தென்னுறந்தை யார்தம்
பெருமான் முகம்பார்த்த
　　பின்னர்—ஒருநாளும்
பூதலத்தோர் தம்மை
　　பொருள்நசையாற் பாராவாம்
காதலித்துத் தாழ்ந்திரப்போர்
　　கண்! உசா

- தண்டி: நூற்பா. 21: மேற்.

பொதுவாக, பொருளைக் கோடி கோடியாகக் கொட்டிக் கொடுக்கினும் உள்ளம் நிறைவு பெறாது என்பர். ஆனால் சோழநாட்டு மன்னனுடைய கொடையின் பெருமையே பெருமை. அம்மன்னனை நாடி வறுமைப்பட்டவர்கள் எத்துணையோபேர் வந்து வந்து போய்க்கொண்டிருந்தனர். மனந்தளராது அவர்களுக்கு மனம்நிறைய வாரி வாரி வழங்கினன் மன்னவன். இதை அருகிருந்து பல நாள் பார்த்து மகிழ்ந்தவர் கவிஞர். ஒருமுறை கவிஞர் சிற்றரசர் பலருடன் அளவளாவிக் கொண்டிருக்கும்பொழுது சோழனின் கொடைப்புகழ் பாடுகிறார்.

வறுமைவாய்ப்பட்டவர்களில் பலர் தம் வறுமையினுடைய தூண்டுதலினால் பொருளைப் பெரிதும் காதலித்து அதற்காகப் பிறரிடம் கையேந்தி நிற்பர். அவர்களுடைய கண் போர்க்குரிய வேற்படையையுடையவனும் தெற்கேயிருக்கும் உறந்தைக்குரியவனுமான சோழ மன்னனது திருமுகத்தைப் பார்த்த பின்னர் ஒருநாள் கூட இவ்வுலகத்திலுள்ள பொருள்

நிறைந்தவர்களுடைய முகத்தைப் பொருள்பெற வேண்டும் என்ற ஆசையால் பார்க்கவே பார்க்காது என்கிறார்!

குறிப்பு: சோழன் முகம் பார்த்தவர் பொருள் நசையார் பிறர்முகம் பாரார் என்று கூறுவதன் மூலம் வறுமை வாய்ப்பட்டவர் வறுமை நிலையறிந்து நிறையக் கொடுக்கும் உள்ளத்தவன் சோழன் என்றும், வரையாது வழங்கும் மனத்தவன் என்றும் கூறிச் சோழன் கொடைப் புகழ் பாடுகிறார் கவிஞர். பாராவாம் என்ற சொல் பார்க்கவே பார்க்காது என்ற பொருளில் மிக அழுத்தமாக விழுந்திருக்கிறது.

செரு—போர்

சென்னி—சோழர்களுக்குரிய சிறப்புப் பெயர்.

உறந்தை — உறையூர். சோழமன்னர்களின் தலை நகரமாக இருந்துவந்த சிறப்புடையது. இது உறந்தையென்றும் கோழி யென்றும் வழங்கப்படும். 'ஊர் எனப்படுவது உறையூர்' எனப் புலவராற் பாராட்டப் பெற்றுள்ளது.

தென்னுறந்தை அழகிய உறந்தை எனலுமாம்.

ஒப்புமை: 'நிற்பாடிய அலங்கு செந்நாப்
பிறரிசை நுவலாமை
ஓம்பா நீயுமாற்ற லெங்கோ'
-புறநானூறு-22

'இரவினானே ஈத்தோன் எந்தை
அன்றை ஞான்றினோடு இன்றினூங்கும்
இரப்பச்சிந்தியேன்'
-புறநானூறு 376.

'இலலென்னும் எவ்வம் உரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே உள,
-திருக்குறள்: 223

## 58

## இரவலர் ஏற்பு!

பூதலத்துள் எல்லாப்
  பொருளும் வறியராய்க்
காதலித்தார் தாமே
  கவர்தலால்—நீதி
அடுத்துயர்ந்த சீர்த்தி
  அனபாயா! யார்க்கும்
கொடுத்தியெனக் கொள்கின்
  றிலேம்! உஎ

—தண்டி: நூற்பா: 46: மேற்

யார் சென்றாலும் இல்லையென்று கூறாது கொடுக்கும் வள்ளல் அனபாய சோழன். ஒருமுறை கவிஞர் ஒருவர் காணச்சென்றார். அரசன் கவிஞரைப் பல நாட்கள் அங்குத் தங்கவைத்து வேண்டுவனவற்றை ஈந்து அவரை மகிழ்வித்தான். மன்னனிடம் வருவார் மாட்டு அவன் காட்டும் அன்பும், அவன் நேர்மையும் கவிஞர் தம் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன. ஒரு நாள் எல்லோரும் குழுமியிருக்க மன்னனை நோக்கிக் கூறுகிறார் கவிஞர்.

நீதியை அடுத்து அதனால் பெறுதற்கரிய புகழைப் பெற்றுயர்ந்த அனபாய சோழ மன்னனே! இவ்வுலகத்திலே மக்கள் வறிஞராகி அதனால் பொருளைக் காதலிப்பவர்கள் உன்னிடத்தே வருகிறார்கள். வந்து தமக்கு வேண்டுவனவற்றை உன்னைக் கேட்காமலே உரிமையோடு தாமே உன் பொருளை எடுத்துச் செல்லுகிறார்கள். அவர்கள் அப்படிச்செல்வதால் நீ யார்க்கும் கொடுக்கின்றாய் என்று கொள்வதற்கில்லை! என்கிறார்.

குறிப்பு:- மன்னனிடம் மக்கள் நெருங்கி உறவாடுவது என்பது அத்துணை எளிதன்று: ஆனால்

சோழனிடம் மக்கள் மிக்க அன்புரிமையோடு பழகினர் என்பதும், வேண்டுவார் வேண்டும் வண்ணம் ஈயும் கொடையாளன் என்பதும் பெறப்படுகிறது.

பூதலம்—உலகம்.

சீர்த்தி—மிகுபுகழ்.

## 59

### பகை ஏன்!

உலைக்குரிய பண்டம்
    உவந்திரக்கச் சென்றால்
கொலைக்குரிய வேழம்
    கொடுத்தான்—கலைக்குரிய
வாணர்கோன் ஆறை
    மகதே சனுக்கிந்தப்
பாணனே டென்ன
    பகை! உ௮

–பெருந்தொகை; பா எண். 1190.

அன்போடு நண்பர் விருந்தளிப்பார். காய்கறிகளின் எண்ணிக்கையை அதிகமாக்கிச் சாப்பிடும் பொழுது நிறைய அள்ளிஅள்ளி வைத்து அன்போடு உண்க என்பார். அவ்வன்புக்குக் கட்டுப்பட்டு விருந்தாளியும் நிறைய உண்பான். பிறகு மற்ற நண்பர்களிடம் அந்த விருந்தாளி, இன்று நம் நண்பர் விருந்துவைத்து என் வயிற்றைக் கெடுத்து விட்டார், இவருக்கு ஏன் என்மேல் கோபம்! என்று நகைச்சுவை ததும்பக் கூறி அவர் விருந்தைப் பாராட்டுவதை நாம் வாழ்க்கையில் காணலாம். உலகிலேயே யாரும்பெறாத பெருங்கீர்த்தியோடு அரசாண்டான் வாணர் குல

மன்னன். அரசியலில் மட்டுமன்று, கொடையியலிலும் பெருவள்ளலாய் வாழ்ந்தான். ஒருமுறை இசைப் புலவன் ஒருவன் வாணனைக் காணச் சென்முன். தன் வறுமையைக்கூறிப் பொருள்பெற நின்முன். அவனுக்கு ஒரு யானையே பரிசாக அளித்துச் சிறப்பித்தான் மன்னவன். பரிசினைப் பெற்றுக் கொண்டு வெளிவந்தான். அங்கே மன்னனைக்காணப் பலர்குழுமியிருந்தனர். அவர்களிடம் மன்னனைப் பாராட்டி மகிழ்கிமுன் அப்புலவன்.

நம் வாணர்குல மன்னவன் கலைகளைவளர்ப்பவன். ஆறை என்ற ஊர்க்குரியவன். உலைக்குரிய அரிசி, பருப்பு முதலியவை என்னிடம் இல்லை. அவ்வளவு வறுமை அதற்காகப் பொருள் பெறும்பொருட்டு விருப்பொடு மன்னனிடம் சென்றேன். சென்ற என்னிடம் போரின்கண் கொலைத் தொழிலையுடைய ஒரு பெரிய யானையை அன்போடுகொடுத்தான். இந்தமகதநாட்டு மன்னனுக்கு இந்த இசைப்புலவனேடு என்ன பகை! நீங்களே சொல்லுங்கள்! என்கிமுர்.

குறிப்பு:: தான் எதிர்ப்பதைவிட நிறைய அள்ளித் தந்து போற்றியதை எண்ணி இறும்பூதெய்துகிறது இசைப்புலவரின் நன்றியுள்ளம்.

ஒப்புமை:-'அடகின் கண்ணுறையாக யாஞ்சில
அரிசி வேண்டினெ மாகத்தான்பிற
வரிசையறிதலின் தன்னுந்தூக்கி
இருங்கடறு வளைஇய குன்றத்தன்னதோர்
பெருங்களிறு நல்கி யோனே!

—புறநானூறு: பா. எண். 140.

## 60

## குருத்தெங்கே!

அவனி முழுதுண்டும்
அயிரா வதத்துன்
பவனி தொழுவார்
படுத்தும்—புவனி
உருத்திரா உன்னுடைய
ஓரங்கல் நாட்டில்
குருத்திரா வாழைக்
குழாம்! உசு

– கம்பர்: தமிழ் நாவலர் சரிதம்:

ஓரங்கல் நாடு மகோன்னத நிலையில் இருந்த காலம். பிரதாபருத்திரனுடைய ஆட்சி. கம்பர் சுற்றுலாப்புறப்பட்டு ஓரங்கல் நாட்டிற்கு வந்து சேர்ந்தார். மன்னன் அவரைப்பெரிதும் வரவேற்று விருந்தளித்தான். பலநாட்கள் அங்குத்தங்கியிருந் தார் கவிஞர். அவனுடைய அறஉள்ளம் கவிஞர் தம் உள்ளத்தை ஈர்த்தது. அவனை நோக்கிக் கூறு கிறார் கவிஞர்.

இந்நிலவுலகை ஆளும் பிரதாபருத்திர மன்னனே! உன் அருள்பெற விழைந்து வருகிறார்கள் இந் நிலவுலக மக்கள். வரும் அவர்களுக்கு விருந் தளித்துக்காக்கும் வள்ளல் நீ! ஆதலினால் அவர்கள் வாழையிலையில் உணவை வைத்து உண்பதனாலும், உன்னுடைய பட்டத்து யானையின் மேல் நீ உலா வருவதைக்கண்டு தொழும் மகளிர்கள் காதல் கொண்டு வாடித் தங்கள் காமவேட்கை தணிய வாழை யிலையில் படுப்பதனாலும் உன்னுடைய ஓரங்கல் நாட்டில் வாழைமரங்கள் குருத்துக்கூட இல்லாமற் போயினவே! என்கிறார்.

குறிப்பு:- 'அவனி முழுதுண்டும்' என்பதனுல் யார்வரி னும் இல்லையெனுது விருந்தளித்துக் காக்கும் வள்ளல் பிரதாபருத்திரன் என்பதும், 'புவனி தொழுவார் படுத்தும்' என்பதனுல் அவன் மகளிர்க்கு அழகுமிக்க காதலுருவினன் என்பதும், பண்பும் அழகும் ஒருசேரப் பெற்றுச் செம்மையான ஆட்சி புரிபவன் என்பதும் பெறப்படுதல் காண்க.

நாள்தோறும் பலர் அவனைக் காண வந்து உண்பதனுலும், அவன்பால் கொண்ட காதல் நோய் தணிய மகளிர் இலையில் படுப்பதனுலும் வாழையிலைகள் பெரிதும் வெட்டப்படுகின்றன என்பது கருத்து.

அவனி, புவனி — நிலவுலகம்.

ஓரங்கல் - தெலுங்கு நாட்டின் தலைநகரம். இப்பொழுது இது வாரங்கல் என்று வழங்கப்பெறுகிறது.

உருத்திரன்—பிரதாபருத்திரன் என்னும் மன்னன். இவன் பன்னிரண்டாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் ஓரங்கல் நாட்டையாண்ட கணபதி வேந்தர்களுள் ஒருவன்.

— தமிழ் நாவலர் சரிதம்: பக் 79-80.

# 61

## நீயெங்கே! நானெங்கே!

நீளத் திரிந்துழன்றாய்
　　நீங்கா நிழல்போல
நாளைக் கிருப்பாயோ
　　நல்குரவே! — காளத்தி
நின்றைக்கே சென்றக்கால்
　　நீயெங்கே நானெங்கே
இன்றைக்கே சற்றே
　　இரு! ௩௦

–மதுரகவிராயர்: தனிச்செய்யுட் சிந்தாமணி; பக் 154.

'இடுக்கண் வருங்கால் நகுக' — என்றார் திருவள்ளுவர். மதுரகவிராயர் வறுமையால்வாடிவருந்தியவர். ஒருமுறை காளத்தி என்ற பெருவள்ளலைக் காணச் சென்றார். 'ஏ! வறுமையே! அவர் எனக்கு நிறையப் பொருள் தருவார். அவரை நான் பார்த்தால் நீ என்னை விட்டு நீங்கி விடுவாய்! பிறகு நீ எங்கே நான் எங்கே என்று வறுமையை நோக்கி மகிழ்கிறார் கவிஞர். துன்பத்தின் உச்ச நிலையையும் கடந்து நின்றதால் கவிஞர் உள்ளம் துன்பத்தைக் கண்டு நகைத்து அதனோடு தோழமை கொள்கிறது.

ஏ! வறுமையே! நிழலானது எப்படிப் பின்தொடருமோ அப்படி நீங்காது என்னைத் தொடர்ந்து என்னோடு நீயும் உழன்றாய். ஆனால் நாளைக்கு நீ என்னோடு இருப்பாயோ! காளத்தி என்ற வள்ளல் வாழும் திரு நின்றையூருக்கு நான் சென்றேனேயானால் நீ எங்கேயோ! நான் எங்கேயோ! யார் கண்டார்கள். ஆகவே இன்றைக்காவது சிறிது நேரம் என்னோடு இருப்பாயாக! என்கிறார்.

குறிப்பு:- காளத்தி வள்ளல் பொருள் ஈந்து தன் வறுமையைப் போக்கிடுவார். ஆகவே வறுமை தன்னைவிட்டு நீங்கிவிடும் என்ற தன்னம்பிக்கையும், வறுமை சூழினும் மகிழ்வுள்ளம் மாறு இயல்பும் கவிஞரிடையே காணப்படுகின்றன. 'இன்றைக்கே சற்றே இரு'—என்ற ஈற்றடி வறுமையின்பால் கவிஞருக்குள்ள பரிவுணர்ச்சியைக் காட்டுகிறது.

மதுரகவிராயர்:- இவர் அமரம்பேடு என்னும் ஊரினர். திருக்கேதீச்சுர நொண்டி இவரால் பாடப்பெற்றது. இவர் ஏறக்குறைய நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னிருந்த புதுவை ஆனந்தரங்கம் பிள்ளை காலத்தினர் என்று புலப்படுகிறது.

## 62

### நீங்காத் தொடர்பு!

ஆலெங்கே யங்கே
    அரும்பறவை ஆல்துயிலும்
மாலெங்கே யங்கே
    மலர்மடந்தை—கோலஞ்சேர்
செங்கே தகைமணக்குஞ்
    செங்குன்றை ஊரனெங்கே
அங்கே இரவலரெல்
    லாம்! ௩௧

–பலபட்டடைச் சொக்கநாதப் புலவர்: தனிப்பாடல் திரட்டு (கா. சு. பிள்ளை பதிப்பு): பக்: 278.

'புகை எங்கு எழுகிறதோ அங்கு நெருப்பு இருக்கிறது'— என்பது பழமொழி. செங்குன்றை ஊர்த்

தலைவன் பெரிய வள்ளல். யார் வந்தாலும் இல்லை என்று கூறாது தன்னாலியன்ற அளவு கொடுக்கும் உள்ளத்தவன். கவிஞர் அவனை நாடி வந்தார். பல நாட்கள் அவனோடு தங்கினார். அவன் வரையாது வழங்கும் தன்மையும், அன்பும் கவிஞர் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன. அவனை உளமாரப் பாராட்டு கிறார் கவிஞர்,

இதோ பாருங்கள்! ஆலமரம் எங்கே பரந்து வளர்ந்து இருக்கிறதோ ,அங்கே பறவைகள் கூட்டம் கூட்டமாயிருக்கும் ஆலிலையில் துயிலும் திருமால் எங்கே இருக்கிறாரோ அங்கே அவருடனே வீற்றிருப் பாள் மலர்மகளாகிய இலக்குமி. நல்ல வடிவும் வளமையு முடைய செந்தாழம்பூ மணங்கமழும் செங்குன்றை ஊருக்குரிய தலைவன் எங்கேயிருக்கிறானோ அங்கே பார்க்கலாம் இந்த இரவலர்களை யெல்லாம்! என்கிறார்.

குறிப்பு:- வறுமைவாய்ப் பட்டவர் யார் வரினும் வரை யாது வழங்கும் வள்ளல் செங்குன்றையூரின் தலைவன் என்பதைப் பல உவமைகள் மூலம் உறுதிப்படுத்துகிறார் கவிஞர். அத்துணை ஈடுபாடு தலைவனிடத்தில் கவிஞருக்கு!
கேதகை—தாழம்பூ.

# 63

## மேகத்தின் மேலான்

காரும் அழகப்பன்
கைக்கொடையின் தன்மையும்
பாருலகில் ஒன்றென்பர்
பாவலரே—தேருங்கால்
தொக்க இடமனைத்தும்
தோன்றிப் பொழியுங்கார்
தக்கதறிந் தீவான்
தகை! ௬௨

-ரே. முத்துக்கணேசன்; 'எழில்'-அழகப்பர் மலர்
விளம்பி-சித்திரை.

டாக்டர் ராம. அழகப்ப செட்டியார் தம் கல்லூரியின் எடுப்பும் அழகும் உலகறிந்த ஒன்று. குழந்தைகள் முதல் ஆய்வாளர் வரை யாவருக்கும் படிப்பு முறை கொண்ட பள்ளிகளையும் கல்லூரிகளையும் காணக்கண் கோடிவேண்டும், இவையெல்லாம் அவரது கொடைப் பெருமையைக் காட்டி நிற்பன. அவர்தம் நினைவாகக் காரைக்குடி 'எழில்' பத்திரிகையின் ஆசிரியர் அழகப்பர் மலருக்குக் கவிதை ஒன்று கேட்கப் பிறந்தது இக் கவிதை.

மேகத்தின் தன்மையும், வள்ளல் அழகப்பரின் கொடையின் தன்மையும் ஒத்தது என்று இப்பரந்த உலகில் பாவலர்கள் கூறுவர், ஆனால் இதனை நாம் ஆராய்ந்துபார்த்தால் அப்படியில்லை. தோன்றிய மேக மானது தொகுதியான இடம் எங்கும் பயனுடைய நிலமா இல்லையா என்றெல்லாம் பகுத்தறியாது தன்னிடமிருப்பவற்றைப் பொழிந்து தீர்த்துவிடும். ஆனால் நம் வள்ளல் பெருந்தகையோ தக்கவை எவை தகாதவை எவை? எனப் பகுத்தறிந்து கொடையை அளிப்பார்!

குறிப்பு:- மேகமானது பாலைநிலம், நடுக்கடல் முதலிய வற்றிலும், நல்ல விளைநிலமான நஞ்சை புஞ்சை எல்லாவற்றிலும், மழையைப் பொழி கிறது. அதனுல் விளைநிலத்தில் பெய்யின் நல்ல பயனும், பாலையிலோ மற்றவற்றிலோ பெய்யின் பயனற்ற தன்மையும் கிடைக்கிறது. அழகப்பரோ பயனற்றவை விடுத்துப் பய னறிந்து செல்வத்தை ஈயும் தன்மையைப் பெற்றுள்ளவராதலால், கொடைத் தொழிலில் மேகத்தைக்காட்டிலும் சிறப்பைப் பெற்றவ ராவார் என்க.

கார்—மேகம்.

தேருங்கால்—ஆராய்ந்து பார்க்குமிடத்து,

தகை-பெருந்தகையாகிய வள்ளல் அழகப்பர்

## 64

### காவெட்டலாமோ!

இடுவோர் சிறிதிங்
கிரப்போர் பெரிது
கெடுவாய் நமனே
கெடுவாய்—படுபாவி
கூவத்து நாரணனைக்
கொன்றுயே கற்பகப்பூங்
காவெட்ட லாமோ
கறிக்கு! ௬௩

–ஒப்பிலா மணிப்புலவர்: தனிப்பாடல் திரட்டு:
(கா. சு. பிள்ளை பதிப்பு) பக்: 187.

'அறஞ்செயவிரும்பு' என்பர். அதனைத் தன் வாழ்வில் வாழ்ந்து காட்டியவர் கூவத்து

நாரணன் என்பவர். அவர் ஒரு பெரிய கொடை வள்ளல். தன்னுலியன்ற அளவு யார்வந்தாலும் இல்லை என்னது கொடுக்கும் இயல்புடையவர். அதிலும் தமிழ்ப் புலவர் என்றுல் அவருக்கு உயிர். அவர்பால் மிக்க அன்புகொண்டவர் ஒப்பிலாமணிப் புலவர். ஒருநாள் வள்ளல் இறந்துவட்டார் என்ற செய்தி கேட்டார் புலவர். ஓடோடிச் சென்று அவர்தம் உடலைக்கண்டு கதறினர். அவர்தம் இழந்த உள்ளத்திலிருந்து எழுகின்ற பாடலைப் பாருங்கள்!

எமனே! நீ கெட்டழிந்து போவாய்! இவ்வுலகத்திலே இல்லை என்னது கொடுக்கும் உள்ளம் படைத்தவர் தொகையோ சிறியது: கொடைப்பொருளை ஏற்பவர் தொகையோ மிகப்பெரியதாயிருக்கின்றது. இந்த நிலையில் கொடுக்கப்பிறந்த கூவத்து நாரணன் எனும் வள்ளலின் உயிரைக்கொண்டு சென்றுயே! உணவுக்குக் கறிசமைப்பதற்குக் கற்பகமரங்கள் நிறைந்த சோலையையே வெட்டிவிடுவதா; அடப்படு பாவி! நீ கெட்டொழிந்தே போவாய்! என்கிறுர்.

குறிப்பு:- ஒன்றிப் பழகி வாழ்ந்த ஒப்பிலாமணிப் புலவரின் அன்புள்ளத் துடிப்பும், 'கற்பகப் பூங்கா வெட்டலாமோ கறிக்கு' என்ற ஈற்றடியின்மூலம் இழப்பின் காரணமாக ஏற்பட்ட புலவரின் ஏக்கமும், கூவத்து நாரணனுக்குக் கற்பகத்தை உவமையாகக் கூறினமையின் வேண்டுவார் வேண்டுவன ஈயும் அவரது கைவண்மையும் பாடலில் வெளிப்படுதல் காண்க!

ஒப்புமை:- ஜெய ஆண்டு புரட்டாசித்திங்கள் 10 ஆம் நாள் 26-9-1954ல் கவிமணிதேசிகவிநாயகம் பிள்ளை மறைந்த ஞான்று பாடியது.

தேசிகவி நாயகமே! தேவர் உமை அங்கு
ஆசுகவி பாட அழைத்தனரோ—நேசமிகு!
சித்தம் உருகிச் சிவமாகி நீநிற்க
இத்தலம்விட் டேகினையோ ஏய்த்து!
நற்றவமே! நற்கவிதை நாயகமே! முத்தமிழைக்
கற்றுத் தெளிந்த கவிமணியே!—கற்றவன்போல்
பற்றின்றி வாழ்வார் பயனில் விழையாமை
மற்றவர்க் கில்லை மனத்து!
உய்ய வழிவகுத்த உத்தமனை ஒண்மைவாய்
ஐயமறப் பைந்தமிழை ஆய்ந்தானை-ஐயையோ!
கொன்றழித்த கூற்றமே! பாக்கள் படைத்திங்கு
நின்றொளிர ஈவையோ நீ!

— ரெ. முத்துக்கணேசன்.

'நனிபேதையே நயனில் கூற்றம்
விரகின் மையின் வித்தட் டுண்டனை'

– புறநானூறு: பா: 227.

## 65

## மலர்த்திறப்பு

காமருதேர் வெய்யவன்
எங்கும் கரம்பரப்பித்
தேமருவு சோலை
மலர்திறக்கும்—தாமரையின்
தொக்க இதழ்விரித்துப்
பார்க்கும் தொலைந்திருள்போய்ப்
புக்க புரைகிளைப்பான்
போல்! ௩௪

—தண்டி: நூற்பா 57: மேற்.

வைகறைப் பொழுது. கவிஞர் அமைதியாய் நடந்து வந்து கொண்டிருந்தார். கொஞ்ச தூரத்தில் நல்ல சோலை ஒன்று தென்பட்டது. அதனுள் நல்ல மணங்கமழ்ந்தது. அதை அனுபவித்துக்

கொண்டு கொஞ்ச நேரம் அங்கு நின்ருர் கவிஞர். அப்பொழுது கதிரவன் உதயமாஞன். தன்கைகளாகிய கதிர்களைப் பரம்பினன். மலர்கள் மலர்ந்தன. இக் காட்சி கவிஞர் உள்ளத்தில் அழியாத ஒரு சுவையை நல்கியது. உடனே அது கவிதையாக மலர்ந்தது.

அழகு பொருந்திய ஒற்றைச் சக்கரத் தேரை யுடையவன் கதிரவன். அவன்எங்கும் தன் கைகளாகிய கதிர்களைப் பரப்பினன். உடனே இருள் ஓடி ஒளிந் தது. மேலும் அவன் விடாமல் தொடர்ந்து எங்கா வது பக்கங்களுக்கிடையில் அவ்விருள் புகுந்திருக்கு மோவெனத் தன் கைகளால் துழாவுவான்போல் மணம் நிறை அந்தச் சோலையிலுள்ள மலர்களையெல் லாம் திறந்து பார்ப்பான். அழகிய குவிந்த தாமரை யின் தொகுதியான இதழ்களையும் விரித்துப் பார்ப் பான்! என்கிருர்.

குறிப்பு:- பகற் காலத்தில் தாமரை மலர்தலும் இரவில் கூம்புதலும் இயற்கை. ஈண்டுக் கவிஞர் கதிரவன் தன் கையால் இருளைத் தேடு வான் போல் மலர்களைத் திறந்து பார்த்த னன் என்று கற்பனை செறியக் கூறுகிருர். இதனை அணி நூலார் தற்குறிப்பேற்றம் என்பர்.

காமர்—அழகு
தேமருவு—மணம் நிறைந்த
புரை—பக்கம்
திளைத்தல்—துழாவுதல்.

ஒப்புமை:- தீய வக்கொடிய கான கத்தரைதி
றந்த வாய்தொறும் நுழைந்துதன்
சாயை புக்கவழி யாதெனப்பரிதி
தன்க ரங்கொடுதி ளைக்குமே!

– கலிங்கத்துப் பரணி: காடுபாடியது: பா. எண் 79.

# 66

## தென்றல்

**தென்றல் அனங்கன்**
**துணையாம் சிலகொம்பர்**
**மன்றல் தலைமகனும்**
**வான்பொருள்மேல்—சென்றவர்க்குச்**
**சாற்றவிடுந் தூதாகும்**
**தங்கும் பெரும்புலவி**
**மாற்ற வருவிருந்து**
**மாம்!** ௩௫

–தண்டி : நூற்பா : 40 : மேற்.

அன்று வீட்டிற்குள் இருப்புக்கொள்ளவில்லை கவிஞருக்கு! வெளியில் புறப்பட்டார். சிறிது தூரம் நடந்தார். ஒருசோலை தென்பட்டது. அதனுள்சென்று அமர்ந்தார். சிறிது நேரம் கழித்துத் தென்றல் வீசத் தொடங்கியது. அதனை அனுபவித்த கவிஞர்கூறுகிறார்.

இவ்வுலகில் ஆண் பெண் இருபாலாரிடையேயும் காமத்தை எழுப்புபவன் மன்மதனல்லவா! அவனுக்குத் துணையாக மேலும் காமம் எழ உதவுகிறது தென்றல். அதுமட்டுமா! தென்றல் வீசத் தலைப்பட்டவுடன் புத்தம் புதிய வளர் நிலையிலுள்ள பூங்கொம்புகள் தளிர்விட்டு வளரத் தொடங்குகின்றன. ஆகவே கணவனைக் கைப்பிடித்து வளரும் பருவமங்கையைப் போன்று பூங்கொம்புகளும் வளருவதால் அவைகளுக்குத் தென்றல் மணம் புரிந்த தலைவனாகிறது. மேலும் பொருள் சேர்க்கும் காரணமாகப் பிரிந்து சென்ற தலைவர்களிடம், பிரிவு வருத்தவாடும் தலைவியர்கள் தங்கள் துன்பத்தை எடுத்துக்கூற விடுக்கும் தூதாகும் தென்றல். இரவில் தலைவன் தலைவியர்களுக்கிடையில்

சில நேரங்களில் ஊடல் நிகழும். அப்பொழுது தென்றலடித்து மகிழ்விக்க அவ்வூடல் நீங்கும். ஆகவே இத்தென்றல் அவர்களுக்கிடையிலே ஊடல் போக்கியதால் புதிதாகவந்த விருந்தினனுமாகும்! என்கிறார்.

குறிப்பு: தெற்கிலிருந்து வீசுவதால் இது தென்றல் எனப்பட்டது. இக்கவிதையில் காமம் எழ உதவுவதால் மன்மதனுக்குத் துணையாளனாகவும், பூங்கொம்பு வளர அதனைத் தழுவுதலால் மணம் புரிந்த தலைவனாகவும், தலைவியர் பிரிவுத் துன்பத்தை உரைக்கச் செல்வதால் தூதுவனாகவும், ஊடல் போக்குவதால் விருந்தினனாகவும் காட்சியளிக்கிறது தென்றல்.

அனங்கன்—மன்மதன்

புலவி—ஊடல்.

## 67

### கார்காலம்

நீயின்றி வேம்தமியோர்
சிந்தை செழுந்தேறல்
வாயின்றி மஞ்ஞை
மகிழ்தூங்கும்—வாயிலார்
இன்றிச் சிலரூடல்
தீர்ந்தார் அமரின்றிக்
கன்றிச் சிலைவளைக்குங்
கார்! ௩. சா

–தண்டி : நூற்பா : 51 : மேற்.

கார்காலம் மக்களுக்குக்களிப்பூட்டுங் காலமல்லவா! இனிமையும் இன்பமும் இழைந்துவரும்காலம். அதனை

எல்லோரும் அனுபவிக்கிறோம். ஆனால் அதனைக் கற்பனை அழகுபட மொழிகிறது கவிஞர் தம் உள்ளம்.

கார்காலம் வந்தது. அது வானகத்தில் எந்த விதமான போருமில்லாமலே சினந்து வானவில்லைப் பூட்டிக் காட்டுகிறது. மழை பொழியப் போகிறது என்ற அக் குறிப்பைக் கண்ட மயில்கள் செழுமையான தேனைக் குடிக்காமலே குடித்ததுபோல் ஆனந்த மயக்கத்தில் ஆழ்கின்றன. ஒரு வீட்டில் காதலி தனித்திருக்கிறாள். வேறொரு வீட்டில் காதலன் தனித்திருக்கிறான். காதலர் ஒருவர்மேல் ஒருவர் கொண்ட காதல் நோயாலும், தனிமையாலும், கார்காலம் ஊட்டும் காமச் சுவையாலும் அவர்கள் உள்ளமானது தீயின்றி வேகின்றது. பிறிதோரிடத்தில் தலைவன் தலைவிபால் ஊடல் தொடங்கிவிட்டது. ஆனால் கார்காலம் நல்கிய இன்பச்சுவையின் இனிமையில் தீர்ப்போர் இன்றியே ஊடல் கலைந்து கூடல் நிகழ்ந்தது என்கிறார்.

குறிப்பு:- தமியோர் சிந்தை தீயின்றி வேம் எனக் கொள்க.

தமியோர்–தனித்திருப்போர்

தேறல்–தேன்

மஞ்ஞை–மயில்கள்

அமர்–போர்

கன்றுதல்–சினத்தல்

சிலை–வானவில்

வாயிலார்—வழியறிந்து தலைவன் தலைவியிடையே ஊடல் தீர்க்கும் தோழி தோழன் முதலியவர்.

ஒப்புமை:-

மங்கையர்கண் புனல்பொழிய மழைபொழியும் காலம்
மாரவேள் சிலைகுனிக்க மயில்குனிக்கும் காலம்.

கொங்கைகளும்கொன்றைகளும்பொன்சொரியும்காலம்
கோகனக நகைமுல்லை முகைநகைக்கும் காலம்
செங்கைமுகில் அனையகொடைச்செம்பொன் பெய்ஏகத்
தியாகியெனும் நந்தியருள் சேராத காலம்
அங்குயிரும் இங்குடலும் ஆனமழைக் காலம்
அவரொருவர் நாமொருவர் ஆனகொடுங் காலம்.

–நந்திக் கலம்பகம்: பா. எண்: 104

## 68

### நிலவு மயக்கம்

திங்கள் சொரிநிலவு
சேர்வெள்ளி வள்ளத்துப்
பைங்கிள்ளை பாலென்று
வாய்மடுக்கும்—அங்கயலே
காந்தர் முயக்கொழிந்தார்
கைவறிதே நீட்டுவரால்
ஏந்திழையார் பூந்துகிலாம்
என்று! ௬௭

–தண்டி; நூற்பா 55: மேற்.

நடுஇரவு. நிலவுபொழிகிறது. எங்கு நோக்கினும் நிலவின் தண்ணொளி. அமைதியின் எல்லை. கவிஞர் வெளியில் மெதுவாக நடந்தார். வாழ்வில் ஏதோ பேரின்பத்தைப் பெற்றதுபோன்று அகமகிழ்ந்தார். அவர்தம் இன்பமகிழ்வில் எழுந்த பாடல் இதோ!

முழுமதி வானில் செல்லத் தொடங்கியது. சொரிந்தது தண்ணிலவை. ஊர்ஓரத்தில் ஒருவீடு. அவ்வீட்டு வெளிவாயிலின் முன் தொங்கியது கிளிக்கூண்டு. நிலவொளி கூண்டினுள்ளும் கிளியின்மேலும், அருகிருந்த கிண்ணத்துள்ளும் விழுந்தது. அதனைக்கண்ட கிளி'

பால் குடிக்கவில்லையே என நினைந்து தன் அலகைக் கிண்ணத்துள் நீட்டிப் பாலென்று குடிக்கத் தலைப் பட்டது. அதுமட்டுமா! அங்கங்கு முற்றம் உள்ள தங்கள் தங்கள் விட்டின் ஒரு பக்கத்திலே, காதல் கொண்ட மகளிர்கள் தத்தம் கொழுநர்களோடு கலவி யில் மயங்கி இன்பத் துய்த்தனர். துய்த்தபின்னர் அவர்கள் தாங்கள் ஆடையின்றிக் கிடப்பதை யுணர்ந்து நிலவைத் துகிலாமென்று எண்ணி வறிதே தங்கள் தங்கள் கைகளை நீட்டுவார்கள்! என்கிறுர்.

குறிப்பு:- பால்போல நிலவெறிக்கிறது - என்று கூறு வார்கள். அந்நிலவொளியைப் பாலாகவும், துயிலாகவும் எண்ணிக் கிளியும் பெண்களும் மயங்கினர் என்ற கவிஞர் தம் கற்பனை நினைந்து மகிழத்தக்கதொன்று.

தன் கற்பனையால் நிலவை வேறென்ருகக் கூறியதால் இதனை அணி நூலார் திரிபதிசய வணி என்பர்.

வள்ளம்-கிண்ணம்
காந்தர்-கணவன்மார்

ஒப்புமை:-

கலவிக் களியின் மயக்கத்தாற்
கலைபோய் அகலக் கலைமதியின்
நிலவைத் துகிலென் றெடுத்துடுப்பீர்
நீள்பொற் கபாடந் திறமினோ!
—கலிங்கத்துப்பரணி: கடைதிறப்பு: பா.எண்: 34

# ௬௭

## தேய்வதேன்!

இன்றுமையாள் மாசிலா
　　வாள்முகங்கண் டேக்கற்றோ
அன்றி விடவரவை
　　அஞ்சியோ—கொன்றை
உளராவா றேடும்
　　ஒளிர்சடையீர் சென்னி
வளராவா றென்னோ
　　மதி! ந–அ

–தண்டி நூற்பா 22: மேற்.

அன்று மாலை நேரம். இனிமை நிறைந்திருந்தது. கவிஞர் மெல்ல நடந்துசென்ருர். வானகத்திலே தேய் பிறை தவழ்ந்து சென்றது. அந்திப் பிறைகண்ட அவருக்குப் பிறைசூடிய பெம்மான் நினைவெழுந்தது. பின் ஏன் இப்படி இந்த நிலவு வளராமல் தேய்ந்து கொண்டே செல்கிறது என்ற ஒரு கேள்வியும் அவர் உள்ளத்தே எழுந்தது. எழுந்த அச் சிந்தனைப் பாடல் இதோ!

கொன்றை மலரும், அதனை அசைத்து உவக்கும் கங்கையும் ஒளிர்கின்ற சடையினையுடைய சிவபெருமானே! உமையவளுடைய மாசு மறுவற்ற பேரொளி திகழும் முகத்தைக் கண்டு அவ்வொளி தனக்கில்லை என்ற காரணத்தால் ஏங்கியோ அல்லது உம் கழுத்தைச் சுற்றிக் கிடக்கும் நஞ்சமைந்த பாம்பைக்கண்டு அஞ்சியோ! என்ன காரணத்தினுல் உம் தலையிலுள்ள பிறையானது வளராமலிருக்கிறது! சொல்வீர்! என்கிருர்.

# 70

## பெண்குழந்தையின் பேச்சு

தங்கத்தின் தாமரைப்பூ
தாளோடு கைபெற்றே
எங்கும் உலவி
இதழ்விரித்துப்—பொங்கிவரும்
பண்ணுகப் பாடும்
பழவீணை! இன்பத்தேன்
பெண்ணுதங் கைக்குழந்தைப்
பேச்சு! ௲௬

- வித்துவான்: க. தேசிகன்.

எங்கிருந்தோ குழல் ஒலி எழுகிறது. யாழ்ஒலி எழுகிறது. உள்ளத்தை மயக்குகிறது. அனுபவிக்கிருர்கள். ஆனல் அப்படி அனுபவிப்பவர்கள் யார்? குழந்தைகளின் மழலைச் சொல்லைக்கேட்டு அதன் இனிமையை அனுபவியாதவர்களே! என்கிருர் திருவள்ளுவர். ஆம் உண்மையில் செவி யின்பம் மட்டுமல்ல; எவ்வகை இன்பமும் குழந்தைகள் இல்லையென்ருல் பயன் நிறைந்த முழுமை பெற்றதாகக் கூற முடியாது. இம்மாதிரி உண்மைகளை நுட்பமாகக் கண்டறிந்து கூறுபவர்கள் கவிஞர்களே! இங்குப் பெண்குழந்தையின் மழலைமொழியை நன்ருக அனுபவித்துக் கூறுகிருர் நம் கவிஞர்.

பெண்குழந்தையின் பேச்சு எப்படியிருக்கும் தெரியுமா? கேள்! உலோகத்தில் சிறந்தது எது? பொன் தானே! மலரில் சிறந்தது தாமரை. ஆக, பொன்னுலான தாமரை மலர் தண்டோடு கைகளைப்பெற்று எங்கும் சுற்றித்திரிவதுபோலத் திரிகிறது பெண் குழந்தை. அக்குழந்தை தன் வாயிதழ் விரித்துப் பேசும் பேச்சோ நன்ருகப் பலகால் பயிலப்பயிலப் பக்குவமடைந்த பழவீணையினின்றும் ஊற்றுப்போல

உணர்வு பொங்க எழும் பண்ணெலி போன்றது. அதுமட்டுமா அப்பேச்சு ஈடில்லாத சுவைபெற்ற இன்பமாகிய தேனுமாகும்! என்கிருர்.

குறிப்பு:- தங்கத் தாமரைப்பூ தாளோடு கை பெற்று எங்கும் உலவித் திரிவது பெண் குழந்தைக்கும். அது பேசும் பேச்சு பொங்கிவரும் பண்ணுகப்பாடும் பழ விணைக்கும்-இன்பத் தேனுக்கும் உவமையாகும். இவ்வுலகில் குழந்தையின் மழலைமொழிக்கு ஈடேயில்லை என்பர். அதிலும் பெண் என்ருலே இனிமை ததும்பும். ஆக, பெண் குழந்தையின் பேச்சு இனிமையிலும் இனிமை என்கிருர். ஆண் குழந்தையைக்காட்டிலும் பெண்குழந்தையின் குரல் இனிமையும், விரைவில் வளர்ச்சிபெறுந் தன்மையும் நிறைந்தது என்பதைக் குறிப்பில் உணர்த்துகிருர் கவிஞர். அவர் தம் கற்பனை, அறிவிற்கு இனிமையும் உணர்வும் ஊட்டுவதாய் அமைந்துள்ளமை எண்ணி மகிழ்க!

க. தேசிகன்:- இவர் தமிழ்நாட்டின் தலைசிறந்த கவிஞருள் ஒருவர். தஞ்சை மாவட்டத்திலுள்ள மாரியம்மன் கோயிலில் பிங்கல ஆண்டு பங்குனித் திங்கள் 13-ஆம் நாள் பிறந்தார். தகப்பனர் பெயர் ம. கோ. கலியபெருமாள். தாயார் பெயர் ஆண்டாள் அம்மாள். 1938-ல் இவர் திருவையாறு அரசர் கல்லூரியில் பயின்று வித்துவான் பட்டம் பெற்றவர். காரைக்குடி மீனுட்சி சுந்தரேசுவரர் உயர்நிலைப் பள்ளியில் பல ஆண்டுகள் தமிழாசிரியராய்ப் பணியாற்றி இப்பொழுது அழகப்பா கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிருர்கள். அக்காலத்தில் விடுதலைப் போராட்டங்களில்

பெரும் பங்கு பற்றியவர். இவர் கம்பன்கழகம் முதலிய பல இலக்கியக் கழகங்களின் கவி யரங்குகளிலும், வானொலிக் கவியரங்கிலும் பங்குபெற்றவர். தனிப்பாடல்கள் பல இயற்றியுள்ளார்.

## 71

### தாள் உதைப்பதேன்!

தூளி படுத்துமே!
    தூங்காமற் கண்சிவப்பத்
தாளுதைத்துக் கொள்ளும்
    தகைமைதான்—தோளால்
பிசைந்து படைக்கும்
    பிரமற்கு மண்ணை
இசைந்து குழைக்கும்
    இயல்பு! ௭௦

-வித்துவான் க. தேசிகன்

'கவிதைகள் நிகழ்காலத்தில் படிந்த, மகத்தான எதிர்காலச் சாயலின் கண்ணாடிகள்' —என்கிறார் ஷெல்லி என்ற ஆங்கிலக் கவிஞர். ஒரு குழந்தை தொட்டிமரக் கட்டிலில் படுத்திருந்தது. ஒரே சிரிப் போடு தன் கைகளை ஆட்டிக்கொண்டு, கால்களால் வெகு விரைவாக உதைத்துக்கொண்டு கிடந்தது. இக்காட்சி எவருள்ளத்தைத்தான் கொள்ளை கொள்ளாது. நம் கவிஞர் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது இக்காட்சி. கவிஞர் தன்னையே மறந்தார். அக்காட்சிக்குள்ளே ஒரு பெருந் தத்துவத்தைக் கண்டார். அதைக் கவிஞர் பாடலாகப் படைத் தளிக்கிறார் நமக்கு!

பாருங்கள் இந்தக் குழந்தையை! ஒரே சிரிப்போடு என்ன பாடுபடுத்துகிறது! தூங்கவில்லை போலிருக்

கிறது. கண்களெல்லாம் ஒரே சிவப்பாயிருக்கின்றனவே! தன் கால்களால் என்ன உதை உதைக்கிறது. இப்படி வெகு விரைவாக உதைத்துக்கொள்ளும் இந்த அழகு நிகழ்ச்சி எதைக் குறிக்கிறது தெரியுமா? தன் தோள் வலிமையினுலே மண்ணை நன்ருகப் பிசைந்து பிசைந்து மனித உருவங்களைப் படைக்கும் பிரமனுக்கு உதவியாக, குழந்தை உதைக்கும் தன் கால்களால் அவனேடு இசைந்து மிதித்து அம்மண்ணைக் குழைத்துத் தரும் இயல்பைத்தான் குறிக்கிறது! என்கிருர் கவிஞர்.

குறிப்பு:- மண்ணைக்கொண்டு பிரமன் மனித உருவங்களைப் படைக்கிருன் என்று பழம்பாட்டி பாட்டன்மார் நம்மிடையே கூறுவதை நாம் கேட்டிருக்கிருேமல்லவா! அதனையும்குழந்தை தன் கால்களால் உதைத்து மகிழும் இந் நிகழ்ச்சியினையும் தொடர்பு படுத்திப் பேசுவதன் மூலம், இவ்வுலகில்மனிதப் பிறவியானது பல்கிப் பரந்து பெருகிப் பெருவாழ்வு வாழ வேண்டுமென்றும் ஒருவருக்கொருவர் அன்போடு ஒட்டி உறவாடி மகிழ வேண்டுமென்றும் அமைந்த வாழ்வின் உயிர்க் கருத்தைத் தம் கவிதையில் பொதிந்து காட்டுகிருர் கவிஞர். நிகழ்கால இக்காட்சியோடு எதிர்கால வாழ்வுக் கருத்தைத் தம் கவிதையின் மூலம் பொருத்திக் காட்டும் இக்கவிஞர்தம் கற்பனை மலரினின்று வெளிப்படும் மணம் போன்று பிறந்திருப்பது எண்ணி மகிழத் தக்கதொன்று!

தூளிபடுத்துதல்-ஒரே சிரிப்போடு கைகளை நீட்டி ஆட்டுதல்.

# 72

## நோகாதோ!

தூக்கியகால் நோகாதோ!
துட்ட முயலகன்மேல்
தாக்கியகால் தானும்
சலியாதோ! —வாக்கார்
தினவரதா! தில்லைத்
திருத்தாண்ட வாநீ
அனவரதம் கூத்தாடி
னல்! சுக

—குரு நமச்சிவாயர்: தனிச்செய்யுட் சிந்தாமணி:பக்:193

அன்பு என்பது எல்லா உயிர்களிடத்தும் காணக் கூடிய ஒன்றல்லவா! 'அன்பின் வழியது உயிர்நிலை' என்றுதானே வள்ளுவம் பேசுகிறது. இவ்வுலகில் அன்பை அடிப்படையாகக் கொண்டு தான் எல்லாவித உணர்ச்சியும் தலையெடுத்து விளங்குகிறது. ஆனல் மற்ற உணர்ச்சிகளைக் காட்டிலும் பெரும்பாலும் அன்பை அடிப்படையாகக் கொண்டு திகழுவது இரக்க உணர்ச்சி ஒன்றுதான்.

மனிதர்களுக்குள் தன்னலம் பற்றியோ, உறவு நிலை பற்றியோ ஏற்படும் இரக்க உணர்ச்சிக்கு மக்கள் அவ்வளவாக மதிப்புத் தருவதில்லை. காணுகின்ற ஒரு பொருளிலோ செயலிலோ பற்றின்றித் தன்னையும் அறியாது உடனே ஈடுபடும் இரக்க உணர்ச்சி படைத்த இதயங்களை நாம் காண்பதரிது- அப்படிப்பட்ட இதயம் படைத்தவர்களைத்தான் நாம் கவிஞர்கள் என்று போற்று கிருேம்.

குரு நமச்சிவாயர் அப்படிப்பட்ட கவிஞர்கள் இனத்தைச் சேர்ந்த ஒருவர். அவர் ஒரு முறை சிதம் பரத்திற்குச் சென்ருர். அங்கு நடராசப் பெருமானைக்

கண்டு வணங்கினர். அந்தத் திருவுருவத்தில் தினைத்தார். மனத்தைப் பறிகொடுத்து நின்ருர். ஒரு காலை முயலகன் மேல் ஊன்றி நின்று மற்றொரு காலைத் தூக்கி நின்று ஆடும் திருக்கோலம் அவர் மனக்கண் முன் வந்து வந்து சென்றது. அது அவருடைய மனத்தை என்னென்னவோ செய்தது. இரக்கஉணர்வு மேலிட்டு விட்டது. தன்னையும் அறியாத பக்தி-இரக்க உணர்வில் அவருடைய உள்ளத்தை ஆட்கொண்டு விட்டது. அவருடைய உள்ளம் இரங்கிக் குழைந்து இறைவனேடு பேசுகிறது பாருங்கள்!

அருள் வாக்குடைய தினவரதா! தில்லையம்பதியிலே நின்று திருத்தாண்டவமாடும் பெருமானே! நீ ஓயாது அல்லும் பகலும் அனவரதமும் நின்று திருநடனமாடிக்கொண்டேயிருப்பாயானல், உன்னுடைய தூக்கிய கால்தான் நோகாதோ! தீமையே உருவாயமைந்த முயலகன்மேல் அழுந்த ஊன்றி நிற்கும் கால்தான் சலித்துப்போகாதோ! என்கிருர்.

குறிப்பு:- நடமிடும் ஆண்டவனிடத்துக் கவிஞருக்குள்ள பக்தியும், அப்பக்தியால் எழுந்த இரக்க உணர்வும் கவிதையில் களிநடம் புரிகின்றன.

குருநமச்சிவாயர்: (16ஆம் நூ.) திருவண்ணமலை குகை நமச்சிவாயரின் மாணவர். தம் ஆசிரியர் பணித்தவாறே சிதம்பரத்தில் உறைந்து திருப்பெருந்துறையிலே முத்தி பெற்றவர். பரமரகசிய மாலை, சிதம்பர வெண்பா, அண்ணமலை வெண்பா முதலிய நூல்களின் ஆசிரியர். சிதம்பரத்தில் இருக்கும்பொழுது தம் ஆசிரியர் ஆணைப்படி சிதம்பரம் திருக்கோயிலுக்குத் திருப்பணிகள் பல செய்துள்ளார். கி. பி. 1607ல் இவர் முத்தியடைந்தாரென்று தெரிகிறது.

—கலைக்களஞ்சியம்: தொகுதி நான்கு; பக்: 65,

# 73

## போதுமே பிறவி!

எடுத்தசன னங்கடொறும்
ஈன்றெடுத்த தாய்மார்
கொடுத்தமுலைப் பால்அனைத்தும்
கூட்டில்—அடுத்தமணிப்
பைந்நா கணைதுயில்மால்
பாலாழி யும்சிறிதாம்
மன்று சிதம்பரதே
வா! சஉ

-பலபட்டடைச் சொக்கநாதப் புலவர்: தனிப்பாடல் திரட்டு: (கா. சு. பிள்ளை பதிப்பு); பக்: 252.

கவிஞர் ஊர்ஊராகச் சுற்றிவந்தார். முடிவில் சிதம்பரத்திற்கு வந்துசேர்ந்தார். அங்கு நடராசப் பெருமானைக் கண்டு கைதொழுதார். கூத்தப் பெருமான் திருவுருவில் தன்னை மறந்தார். இறைவனிடம் இனிப் பிறவாதிருக்க அருள்புரிக என வேண்டுகிறார்.

உலகெல்லாமுடைய மன்னர்மன்னனே! சிதம்பரத்திலுறையும் தேவனே! நான் கணக்கிடலங்காது, எவ்வளவோ பிறவிகள் எடுத்து விட்டேன். அவ்வளவு பிறவியிலும் என்னை எத்துணையோ தாய்மார் ஈன்று தங்கள் தங்கள் முலைப்பாலை அருந்தக் கொடுத்து வளர்த்துள்ளனர். அவர்கள் எனக்குக் கொடுத்த அந்தமுலைப்பால் துளிகள் அனைத்தையும் ஒன்று சேர்த்துப் பார்த்தோமேயானல், மணிகள் பொருந்திய படத்தையுடைய பாம்பைப் படுக்கையாகக் கொண்டு அதில் துயில்கின்ற திருமாலின் திருப்பாற்கடலும் சிறியதாய்த் தோன்றுமே! என்கிறார்.

குறிப்பு:- தான் குடித்த முலைப்பாலின் பெருக்கம் திருமால் இருக்கும் திருப்பாற்கடலைக் காட்டிலும்

பெரிது என்பதன்மூலம் தான் எத்துணையோ பிறவி எடுத்தெடுத்து இளைத்து விட்டேன் என்பதை மிக அழுத்தமாகக் கூறித் தனக்கு இனிப் பிறவாமை வேண்டுமென்று இறைவனிடம் வேண்டுகிறார் கவிஞர்!

சனனம்—பிறவி.

பைந்நாகம்—படத்தையுடைய பாம்பு

பால்ஆழி—திருப்பாற்கடல்.

## 74

### பொடி மருந்து

ஓடுவிழுந்து சீப்பாயும்
ஒன்பதுவாய்ப் புண்ணுக்
கிடுமருந்தை யானறிந்து
கொண்டேன் — சுடுவருந்துந்
தேவாதி தேவன்
திருவொற்றி யூர்த்தெருவிற்
போவார் அடியிற்
பொடி! சஅ

–பட்டினத்தடிகள்: திருப்பாடல் திரட்டு: பக்: 244

மெய்யடியார்கள் தன்னை மறந்து இறைவன் திருவருளில் திளைப்பார்கள். அவர்களுக்கு இவ்வுலகில் எதைக் காண்கினும் கேட்கினும் எல்லாம் இறைமயமாகவே தோற்றும். நம் பட்டினத்தடிகளும் அத்தகைய பெருநிலையை அடைந்தவர். எல்லாம் சிவமயமாகவே கண்டவர். அவர் தம் வாழ்வின் கடைப் பகுதியில் திருவொற்றியூருக்கு வந்து சேர்ந்தார். அங்கு எழுந்தருளியிருக்கும் இறைவனிடத்து ஆராத காதல் பூண்டார். அதன் காரணமாக அங்கு வாழுபவர்களெல்லாம் இறைவன் திருவடியார்களாகவே தோன்றுகிறார்கள் அடிகளுக்கு!

முதுமைபெற்று முதிர்ந்த புண்ணுண்டாகிச் சீழானது பாய்ந்து ஒன்பது துளைப் புண்களைப்பெற்ற இவ்வுடலுக்குப் போடும் மருந்தை யான் அறிந்து கொண்டேன். அதுதான் நஞ்சு அருந்தும் தேவாதி தேவனாகிய சிவபெருமான் இருந்து அருளும் திருவொற்றியூரின் தெருவில் நடந்து செல்பவர் களுடைய அடியில் எழும் துகள்களாகிய பொடியே என்கிறார்.

குறிப்பு:- திருவொற்றியூரின் பாலும், அங்கு உறையும் இறைவன் பாலும் அத்துணை ஈடுபாடு அடிகளுக்கு! பக்தியில் உள்ளத்தையும் உடலையும் மறந்து இறைவன் அருளில் திளைக்கும் நிலையைக் காட்டுகிறது இக் கவிதை.

பட்டினத்தடிகள்:- இவர் சுமார் 1000 ஆண்டுகளுக்கு முன் காவிரிப்பூம் பட்டினத்திலே பிறந்தவர். தந்தையார் பெயர் சிவநேசர். தாயார் ஞானகலாம்பை. இவரது இயற்பெயர் திருவெண்காடர். இவருடைய திருப்பாடல் களை நம்பியாண்டார் நம்பிகள் பதினொன்றுந் திருமுறையில் சேர்த்துள்ளார். இவர் சென்னைக்கு அருகிலுள்ள திருவொற்றியூரில் முத்தியடைந்த நாள் ஆடி உத்திராட நாள் என்பர்.

## 75

### கடலின் செருக்கு!

கங்குலும் நண்பகலும்
　　துஞ்சா இயல்பிற்றாய்
மங்குல்சூழ் மாக்கடல்
　　ஆர்ப்பதூஉம்—வெஞ்சினவேல்
காண்பயந்த கண்ணிக்
　　கடுமான் திரையனை
யான்பயந்தேன் என்னும்
　　செருக்கு! சச

-பெரும்பாணாற்றுப்படை: தனி வெண்பா:
பத்துப்பாட்டு: பக். 262.

தொண்டைமான் இளந்திரையனுடைய கடற்கரை நகரம். கடற்கரையை ஒட்டிய அரச மாளிகையில் தங்கியிருந்தாள் மன்னனின் தேவி. அங்குத் தேவி வந்திருக்கும் செய்தி கேட்ட தொண்டை நாட்டு அரசவைக் கவிஞர் மன்னன் தேவியைக் காணச் சென்றார். மாலை நேரம். மன்னனின் தேவியும் கவிஞரும் உரையாடிக்கொண்டிருந்தனர். கடல் பெரு முழக்கம் செய்தது. கவிஞர் தேவியை நோக்கி ஏன் இந்தக் கடலானது இவ்வளவு பெருமிதத்தோடு ஆர்ப்பரிக்கிறது தெரியுமா என்ற ஒரு கேள்வியைப் போட்டுக்கொண்டு மேலும் சொல்லுகிறார்.

நம்முடைய தொண்டைநாட்டு மன்னன் இளந்திரையன் பகைவரைக் கண்டவிடத்துச் சினந்து எழும் கொடிய வேற்படையை யுடையவன். ஆதொண்டை மலர்மாலையைத் தலையில் சூடியவன். விரைந்து செல்லும் குதிரையை யுடையவன். மரக்கலத்தின் அறையிலிருந்து கிடைத்தவன். மேகங்கள் சூழ்ந்த

இந்தப் பெரிய கடலானது, இத்தனையும் பொருந்திய இளந்திரையனை யல்லவா, நான் பெற்று இவ்வுலகிற்குத் தந்தேன் தந்தேன் என்ற பெருமிதத்தோடு இரவும் பகலும் தூங்காத இயல்போடு முழக்கி ஆர்ப்பரிக் கின்றது! என்கிறார்.

குறிப்பு:- இரவிலும் பகலிலும் கடல் அலைகள் மேலெழுந்து ஆர்ப்பரித்தல் இயற்கை. ஆனால் ஈண்டுக்கவிஞர், ஒப்புயர் வில்லாத் தன் மன்னனைத் தந்ததால் கடல் ஆர்ப்பரிக் கின்றது என்று கூறும் கற்பனையில் அழகு மிளிர்கின்றமை காண்க. இதனை அணி நூலார் தற்குறிப் பேற்றம் என்பர்.

கங்குல்–இரவு
மங்குல்–மேகம்
ஆர்ப்பரித்தல்-ஒலித்தல்
கான்–மரக்கலத்தின் ஒரு பகுதி
திரையன்–இளந்திரையன்

திரையன்:- நாகபட்டினத்துச் சோழன் பிலத்துவாரத்தால் நாகலோகத்தேசென்று நாகன்னியைப் புணர்ந்த காலத்து அவள் யான் பெற்ற புதல்வனை என் செய்வேனென்ற பொழுது, தொண்டையை அடையாளமாகக் கட்டிக் கடலிலே விட, அவன் வந்து கரையேறின் அவற்கு யான் அரசுரிமையை எய்துவித்து நாடாட்சி கொடுப்பன் என்று அவன் கூற, அவளும் புதல்வனை அங்ஙனம் வரவிடத் திரை தருதலின் திரையனென்று பெயர் பெற்ற கதை

– பெரும்பாணாற்றுப்படை:
நச்சினார்க்கினியர் உரை: பக் 214;

## 76

### ஓர் குறை!

உமையவளும் நீயும்
ஒருங்கொப்பே ஒப்பில்

உமையவளுக் குண்டங்கோர்
ஊனம்—உமையவள்தன்

பாகந்தோய்ந் தாண்டான்
பலிக்குழன்ருன் பாண்டியன்உன்

ஆகந்தோய்ந் தாண்டான்
அரசு! ௬௫

- கம்பர்: பெருந்தொகை: பா எண் 1504.

ஒரு முறை கம்பர் பாண்டிய நாட்டிற்கு வந்து சேர்ந்தார். பாண்டிய நாட்டு மக்களும், மன்னனும், அவன் தேவியும் பெரிதும் வரவேற்றனர். மன்னனும் அவன் தேவியும் மிகுந்த அன்போடு விருந்தளித்தனர். எல்லாவற்றையும் கண்ட கவிஞர் அவர்களுடைய அன்பைப் பெரிதும் பாராட்டி வாழ்த்துகிருர்,

பாண்டிமாதேவியே! நீயும் எல்லாம்வல்ல இறைவியான உமையவளும் ஒப்பானவர்கள் ஆவிர்கள். இருவிரும் ஒப்புடையரா யிருப்பினும், உமையவளுக்கு ஒரு குறை மட்டும் உண்டு. அது என்னவென்ருல் உமையவளைத் தன் பாகத்திலே கொண்ட சிவ பெருமான் அவள் பாகந்தோய்ந்த காரணத்தால் ஆண்டியாகித் திருவோடு ஏந்திப் பிச்சை எடுத்துக் கொண்டு அலைகிருன். ஆனல் உன்னுடைய ஆகந் தோய்ந்த பாண்டிய மன்னனே மன்னர் மன்னனுகி நாட்டை ஆள்கிருன் என்கிருர்.

குறிப்பு:- பாண்டிய மன்னனிடத்தும் அவன் தேவி யிடத்தும் கம்பருக்கு எத்துணை ஈடுபாடு என்பதையும், அவர்கள் அவர் பால்கொண்ட அன்பின் நிலையினையும் தெள்ளத் தெளியக் காட்டி நிற்கிறது கவிதை.

ஊனம்—குறை

பலி—பிச்சை

## 77

## இருதழும்பு

மாந்தையிலே வாழும்
 மகுடத்தி யாகியுனக்
கேந்து தழும்பேர
 இரண்டுளவே—வேந்தர்
முடித்தழும்புன் காலிலே
 முத்தமிழோர்க் கீயும்
படித்தழும்புன் கையிலே
 பார்! சா கூ

– ஒப்பிலா மணிப்புலவர்: தனிப்பாடல் திரட்டு;
(கா. சு. பிள்ளை பதிப்பு): பக் 185.

செய்யும் தொழிலனைத்தும் சீர்பெறுதற்கே என்பர். மாந்தை என்பது ஒரு சிற்றூர். அங்கே உலோகத் தொழில் செய்யும் கம்மாளர் ஒருவர் வாழ்ந்துவந்தார். அவருடைய தொழில் மன்னர் களுக்குக் பொன்முடிகள் செய்தளிப்பதும், பொன் அளக்கின்ற படி அல்லது மரக்கால் செய்து கொடுப்பதுந்தான். பலப்பல மன்னர்களிடமிருந்து அவருக்கு வேலைகள் வந்து கொண்டேயிருக்கும் எப்பொழுதும் வேலையிலே மூழ்கியிருப்பார். தானே தன் கையாலேயே செய்ய முற்படுவார். யாரிடமும்

அன்புபாராட்டுவார். ஒருமுறை ஒப்பிலாமணிப்புலவர் அவ்வூருக்கு வந்தார். அவரைக்கண்டு கம்மாளர் வரவேற்று அன்புடன் விருந்தளித்தார்! வேண்டிய பொருளும் ஈந்தார். எல்லாவற்றிற்கும் மேலாக அவர் தம் அன்பு கவிஞரைப் பெரிதும் கவர்ந்தது. பின் அங்கு குழுமியிருந்தவர்களிடம் கம்மாளரை முன் னிலைப் படுத்திக் கூறுவதுபோல் அவரைப் பாராட்டி மகிழ்கிறார் கவிஞர்.

இந்த மாந்தை என்ற சிற்றூரிலே வாழ்கின்ற, மன்னர் முடிகளைச் செய்தளிக்கும் கொடைவள்ளலே! உன் உடலில் பெற்றிருக்கும் தழும்புகளோ இரண்டுண்டு. அவற்றில் உன் காலிலே இவ்வுலக வேந்தர்களுக்கு முடி செய்யுங்காலத்துப்பெற்ற முடித் தழும்புகளும், அடுத்து உன் கையிலே மன்னர்கள் முத்தமிழ்ப் புலவர்களுக்குப் பொன்பொருள் முதலிய வற்றை அளக்கப் பயன்படும் கருவியாகிய படிகளைச் செய்யும்பொழுது பட்ட படித்தழும்புகளும் உள்ளன பார்ப்பாயாக! என்கிறார்.

குறிப்பு:- முடி செய்யுங்காலத்து, கைகள் மட்டும் போதாமல் அவற்றைக் கால்களிலே வைத்து அணைத்துக் கொண்டு கைகளால் வேலை களைச் செய்வர். அப்படிச் செய்யுங்காலத்து அவ்வுலோக முடி காலிலே உராய்ந்து உராய்ந்து அழுத்தமான குறியை இட்டு வைக்கும். படி செய்யும் பொழுதும் அவ் வுலோகம் உராய்ந்து அழுத்தமான குறியைக் கையில் இட்டு வைக்கும். இஃது இயற்கை. அதனைக் கவிஞர் கற்பனை நயந்தோய, மன்னர் விழுந்து வணங்குவதனால் கொண்ட முடித்தழும்பும் கொடை செய்ததனால் உண் டான படித்தழும்பும் என்று நினைக்குமாறு மயக்கந் தோன்றக் கூறியமை எண்ணி இன் புறத்தக்க தொன்று.

# 78

## பா இனிமை

கொஞ்சு மொழியுங்
குலவிவரும் சொல்லழகும்
பிஞ்சு மொழியாகப்
பேசுமே—நெஞ்சுதனில்
பூவினிக்கத் தேன்வடியும்
புத்தேரி வாழ்கவிஞன்
பாவினிக்கப் பாடும்வெண்
பா! சுஎ

— ரெ. முத்துக்கணேசன்.

29-6-1953 ஆம் நாள் காலை மணி 11க்கு நாகர் கோயிலை அடைந்தேன். அங்கிருந்து ஒன்றரை மைல் கடந்து புத்தேரி என்ற சிற்றூரை அடைந்தோம். அங்கு ஒரு சிறு சந்து. அதன் நடுவில் ஒரு பழைய வீடு. உள்ளே சென்றவுடன் மெலிந்தவுடல் படுக்கையில் படுத்துக்கொண்டே வாருங்கள் வாருங்கள்எனக் கைகூப்பி வரவேற்றது. இடை இடையே இருமலின் துன்பம். நோய் தாண்டவமாடி இளைத்து மெலிந்தவுடல். உதிர்ந்து விழும் முதிர்ந்த நிலை, இக் காட்சியைப் பார்ப்பதற்கே கண்ணும் மனமும் கலங்கின. கண்களில் நீர் பெருக அவர் பக்கலில் அமர்ந்தேன். உறுதி வாய்ந்த குரலில் பேசினார். அவருடைய சொற்கள் தேனின் இனிமையையும் மலரின் மணத்தைதையும் நல்கின. இரண்டு மணிகள் போனதே தெரியவில்லை. விருந்தளித்தார். உண்டபின் புறப்பட்டேன் வழி முழுவதும் அவருடைய வெண்பா யாப்பில் அமைந்த பாடல்கள் என் சிந்தனையில் கலந்து சுழன்றன. அதன்பின் எழுந்த பாடல் இதோ!

மலர் இயற்கையில் தானாக மலரக் காண்கிறோம். மலரை எப்படி இயற்கை மலர்விக்கிறது தெரியுமா?

அதனுள்ளிருக்கும் தேனின் சுவையும் குளிர்மையும் மலரின் இதழ்களில் ஊறி ஊறி இதழனைத்தையும் இனிக்குமாறுசெய்து மலர்விக்கிறது. பின் அம்மலரி னின்றும் தேன்சொட்டுச் சொட்டாய்வடிகிறது. இப்படி ஓரிடத்திலா எத்தனையோ இடங்களில்! செடிக்குச் செடி! ஊர் முழுதும் இக்காட்சிதான். அப்படி இனித்து மலர்ந்து தேன் வடியும் புத்தேரி என்ற ஊரில் வாழுகின்ற கவிஞர் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள். அவர் தம் கவிதைகள் அனைத்தும் சுவைமிக்கன. அவற்றுள் வெண்பா யாப்பிலமைந்த கவிதைகள் இனிமையே உருவாய்த் திகழ்வன. அவர் வெண்பாப் பாடுவதனால் தமிழ்ப் பாக்களே இனிக்கத் தொடங்கிவிடுகின்றன, இனிக்கப்பாடும் அப்பாக்கள் படித்துத் திளைப்பார் தம் நெஞ்சொடு கொஞ்சிக் கொஞ்சி அன்பு மொழியாகப் பேசும். அவற்றில் அவர் பெய்திருக்கும் சொற்கள் கருத்தினைக் குழைத்துத் தெளிவுடனும் எளிமையுடனும் நம்பால் உறவாட வரும், மேலும் இன்பப் பாவாகக் குழந்தை மொழி போல் இனிமை ததும்ப நம்மோடு பேசும்! என்க.

தேசிகவிநாயகம் பிள்ளை:- இவரைக் கவிமணி என்றே அழைப்பர், இவர் திருவிதாங்கூருக்கு உட்பட்ட நாஞ்சில் நாட்டில் தேரூர் என்னும் ஊரில் பிறந்தவர். பிறந்த ஆண்டு; தாது ஆண்டு (கி. பி. 1876) ஆடித்திங்கள் 14 ஆம் நாள். ஆயில்ய விண்மீனில் பிறந்தவர். தந்தை பெயர் சிவதாணுபிள்ளை. தாயார் ஆதிலெட்சுமி அம்மாள். மனைவி புத்தேரி என்னும் ஊரில் பிறந்த உமையம்மையார். இவர் திருவாவடு துறை ஆதீனத்தைச் சேர்ந்த வாணன்திட்டு மடத்தில் சாந்தலிங்கத் தம்பிரான் என்பவ ரிடத்தில் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார்.

இவர்தம் புனைபெயர்கள்;- ஆண்டான், கவிராயன், ஐயம் பிள்ளை, தேவி, குயில், யதார்த்தவாதி.

இவர் இயற்றிய நூல்கள்:- மலரும் மாலையும், ஆசிய ஜோதி, உமர்க்கய்யாம் பாடல்கள், நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழி மான்மியம், காதல் பிறந்த கதை, தேவியின் கீர்த்தனங்கள், காந்தளூர்ச்சாலை முதலியனவாகும்.

பேரும் புகழும் பெற்ற இக்கவிஞர் பெருமான் ஜெய ஆண்டு புரட்டாசித் திங்கள் 10-ஆம் நாள் 26—9—1954ல் இறைவன் திருவடி நிழல் எய்தினர்.

## 79

## திருவாசகத் தேன்

தொல்லை இரும்பிறவிச்
சூழுந் தளைபோக்கி
அல்லலறுத் தானந்தம்
ஆக்கியதே—எல்லை
மருவா நெறியளிக்கும்
வாதவூர் எங்கோன்
திருவா சகமென்னுந்
தேன்! சஅ

–பெருந்தொகை: பா எண்: 2038.

'திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்'- என்பது பழமொழி. ஆகவே திருவாசகம் மக்கள் உள்ளத்திற்கு மதுரவாசகமாயிற்று. கல்மனத்தையும் கனிவித்துக் கசிந்துருகச் செய்ய வல்லது திருவாசகம். இதனைப் பாடியருளியவர்

மாணிக்கவாசகர். ஒரு கவிஞர் திருவாசகத்தை நினைந்து நினைந்து உருகினர். பாடிப்பாடி அதிலே திளைத்தார். அது பிறவித் தளையறுத்து இறைவன் திருவடியினை நல்கும் என்று அதன் பெருமையைச் சிறப்பித்துக் கூறுகிறர். திருவாசகத்தில் கவிஞருக்கு அத்துணை ஈடுபாடு!

திருவாதவூரிலே பிறந்தவர் மாணிக்கவாசகர் அவர் எங்கள் அன்பிற்குரிய தலைவர். அவர் அருளிய திருவாசகம் என்னும் அருமருந்தே ஆனந்தத் தேனுகும். ஆன்மாவானது இம்மண்ணுலகில் உழல்வதற்கு இயற்கையில் எத்துணையோ பிறவிகளை எடுக்கவேண்டியிருக்கிறது. தொல்லைதரும் பழமையான அப்பிறவிகளை எடுப்பதற்குக் காரணம் ஆன்மாவைச் சூழ்ந்திருக்கும் அவா, அறியாமை, முதலிய இடர்கள் ஆகும். இந்தத் திருவாசகமென்னும் தேன் அத்தகைய இடர்களைப் போக்குகிறது. நம்முடைய வினைத்துன்பங்களின் கருவறுத்து ஆனந்த நிலையான பேரின்பத்தை அடையச் செய்கிறது. மேலும் எந்தவித எல்லையுமில்லாது அழியாத நெறியாகிய மற்றென்றினும் கலவாத தூய தெய்வப் பெருநிலையாகிய வீட்டு நெறியை அளிக்கும்! என்கிறர்.

குறிப்பு:- இயற்கையில் மலரில் பிறந்தது தேன். அத்தேன், மக்கள் உடல்நலத்தைச் சிதைக்கும் நோயின் அடிப்படையை அறிகிறது. அதனைப் போக்குகிறது. பின் நோயைக் குணமாக்கும் அருமருந்துமாகிறது. பின் இதயம் நிறைந்த மகிழ்வை அளிக்கிறது. அதுபோல மாணிக்கவாசகரிடமிருந்து பிறந்த திருவாசகம் பிறவி எடுப்பதற்குரிய அடிப்படைக் காரணத்தை அறிகிறது. அதனைப் போக்குகிறது. பின் பிறவி எடுக்காமலிருப்பதற்கு வேண்டி அவா, வினை

முதலியவற்றை நீக்கி நலமளிக்கும் அரு மருந்துமாகிறது. பின் வீட்டு நெறியை அளித்துப் பேரின்ப நிலையை அடையச் செய்கிறது என்ற குறிப்பை அளிக்கிறார் கவிஞர்.

தோல்-பழைய

தளை-பிறவிக்குக் காரணமான அவா, அறி யாமை முதலிய துன்பங்கள்
மருவாநெறி-வீட்டு நெறி

**மாணிக்கவாசகர்:-** திருவாதவூரில் பிறந்தவர். கலை பல பயின்றபின் அரிமர்த்தன பாண்டிய மன்னனிடம் அமைச்சராய் அமர்ந்தார், இவருக்குப் பாண்டியனால் கொடுக்கப்பட்ட பட்டம் தென்னவன் பிரமராயன் என்பது. அரசியல் அறிஞர். அமைச்சியல் வல்லுநர். பல ஆண்டுகள் பதவியில் அமர்ந்த இவருக்கு ஆன்ம விடுதலை ஏக்கம் பிறக்கத் தலங்கள் பல சென்று, திருப்பெருந்துறையை அடைந்தார். ஆங்குக் குருந்த மரத்தடியில், இறைவன் குருவடிவில் இவரை ஆட்கொண் டார். இவர் பாடிய நூல்க்ள்:- திருவாசகம், திருக்கோவையார்.

**திருவாசகம்:-** சைவத்திருமுறை பன்னிரண்டனுள் இது எட்டாந் திருமுறையாகும். பிற புலவர்கள் இதற்கு அளித்த பெயர்களாவன; மணிவாசகம், மதுரவாசகம், வாசகமாலை, வாசகத்தேன் என்பன

# 80

## தமிழ் வைப்பு

முப்பாலும் உண்டோம்
முலைப்பால் இனிநுகரோம்
அப்பாலுக் கப்பாலும்
ஆயினேம்—எப்பொருளும்
உள்ள படியுணர்ந்தோம்
ஓதிக் குறைதீர்ந்தோம்
வள்ளுவனார் வைப்பெமக்கு
வாய்த்து! ௬௧௯

–பெருந்தொகை: பா. எண்: 1999,

திருக்குறளைப்பற்றிக் கலைமகளே, 'வள்ளுவர் வாயதென் வாக்கு'-என்று கூறியதாகத் திருவள்ளுவமாலையிலுள்ள ஒரு பாடல் தெரிவிக்கின்றது. ஆகவே அதன் பெருமை அளவிடற்கரியது. திருக்குறள் தமிழன் பேழை. தமிழ் மக்களின் அழியாக் கருவூலம். கருத்துப்பொற்சுரங்கம். உலகப் பொதுமறை. ஆகவே இந்நூலைக் கற்றுத்தெளிந்த ஒரு கவிஞர் அதன்மேல் கொண்ட காதலால்பாடிய பாடல் இதோ!

திருவள்ளுவர் தந்த நிதியாகிய திருக்குறள் நமக்கு வாய்த்ததனுல் அறம்-பொருள்-இன்பம் என்ற முப்பாலையுண்டோம். ஆகவே இனி முலைப்பாலை அருந்தோம்! சமுதாயமாயினும் சரி, அறமாயினும் சரி, அரசியலாயினும் சரி, இன்பமாயினும் சரி எப்பொருளையும் அதன் உண்மைப் பொருளை உள்ளபடி உணர்ந்தோம். அதனை ஓதி எங்கள் அறியாமை அகன்று அதனுல் எங்கள் குறைதீரப் பெற்றேம். ஆகையினுலே உண்மையை உணர்ந்த

காரணத்தினால், அறிவு தெளிந்து அழியா நிலையை யடைந்ததனால் அப்பாலுக்கப்பாலும் ஆயினேம் காண் என்கிறார்.

குறிப்பு: முப்பால்-திருக்குறளுக்குரிய பெயர். அறத்துப்பால் - பொருட்பால் - காமத்துப்பால் என முப்பகுதியைக் கொண்டமையின் முப்பால் எனப் பெயர் பெற்றது.
வைப்பு—நிதி

முலைப்பால் கேவலம் அழியக்கூடிய இவ்வுடலை மட்டும் வளர்க்கும். முப்பால் அறிவினை வளர்த்து உள்ளத்தைப் பண்பாடுடையதாக்கிக் காதலும் அறமும் பொருளும் உணர்த்தி இறைநிலை கற்பிக்குமாதலின் முலைப்பால் இனித் தேவையில்லை என்று குறிப்பாலுணர்த்துகிறார் கவிஞர்.

முலைப்பால் இனி நுகரோம் - என்பதற்கு இனி வேறு பிறவி எடுத்துத் தாய்ப்பாலுண்ணாது வீடுபேறு எய்துவர் என்பதைக் கருத்தாகக் கொள்வாருண்டு.

திருக்குறள்: திருவள்ளுவரால் இயற்றப்பட்டது. 133 அதிகாரங்களையுடையது. ஒவ்வொரு அதிகாரமும் பத்துப் பத்துப் பாடல்களைக் கொண்டது. 1330 அருங் குறள்களை யுடையது. குறள் வெண்பாக்களால் ஆயது. அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என முப்பிரிவினையுடையது. இதற்கு உரை எழுதினோர் பதின்மர் என்பர். இவற்றுள் மறைந்தன பல. கிடைப்பன சில. அவற்றுள் பரிதியார், காளிங்கர், மணக்குடவர், பரிப்பெருமாள், பரிமேலழகர் ஆகியோர் உரைகள் கிடைத்துள. உலக இலக்கிய மொழிகள் பலவற்றிலும் மொழி

பெயர்க்கப்பெற்றுள்ள ஒப்பற்ற தமிழ் நூல் இந்நூல் ஒன்றுதான். இந்நூல் மக்களினத்திற்கே கிடைத்தற்கரிய செல்வமாகும்.

ஒப்புமை:- காதற் களிப்பூட்டும்
கற்க அறமுணர்த்தும்
போதப் பொருளுரைக்கும்
பொய்யாத—வேதமெனும்
நீதித் திருக்குறளை
நெஞ்சாரத் தம்வாழ்வில்
ஓதித் தொழுதொழுக
ஓர்ந்து!

-நல்லுரை வெண்பா; பா எண்: 30

## மதிப்புரை

மறைந்த பழந்தமிழ் இலக்கியத்தைச்சேர்ந்த பாடல்கள் பலவற்றையும், கல்வெட்டுப் பாடல்களேயும், மேற்கோள் பாடல் களையும் ஆராய்ந்து தொகுத்த உரைவிளக் கத்துடன் கூடிய நல்ல அரிய நூல் இது. இதில் 80 பாடல்கள் உள்ளன. இவை அகம் என்றும் புறம் என்றும் பிரிக்கப்பட்டிருக்கின் றன. கதைக் கோப்பு அமையுமாறும் அமைக் கப் பட்டுள்ளன. புறப் பாடல்கள் வீரப்— கொடை பிறவகை எனவும் பிரிக்கப்பட்டிருக் கின்றன. இத் தொகை நூலுக்கு கல்வெட்டுப் பாடல்களே ஸ்ரீ சா. கணேசன் தந்துதவி யிருக்கிறுர். தமிழ் இலக்கியங்களே முறை யாகப் பயின்றவரும் ஆராய்ச்சி மிகுந்தவரும் கவிஞரும், கவியரங்குகளில் பங்குகொண்ட வருமான ஸ்ரீ ரெ. முத்துக்கணேசனின் இந்த அரிய படைப்பு தமிழ் இலக்கியத்தில் இன்பம் துய்க்க விழைவார்க்கு ஒரு நல்ல வாய்ப்பு.

—தினமணி
5–11–1959



சங்கப் புலவர்கள் முதல் பிற்காலப் புலவர்கள் வரை தமிழ்ப் புலவர் பெருமக்கள் இயற்றிய தனிப் பாடல்களில் கருத்தாழமும், கவிதை நயமும் மிக்க சிறந்த பாடல்களைப் பொறுக்கி, எடுத்துத் தொகுத்து இந்தத் 'தமிழ்த் தொகை' நூலை இயற்றியிருக்கிறார் திரு ரெ. முத்துக்கணேசன்.

ஆசிரியர் தேர்ந்தெடுத்துள்ளபாடல்கள் அனைத்தும் முத்துக்கள்தான். எண்பது பாடல்களைக் கொண்ட இத்தொகை நூலை அகம்—புறம் எனப் பிரித்து ஒவ்வொரு பிரிவிலும் பொருத்தமான பாடல்களைச் சேர்த்திருக்கிறார். 'விடிவது எப்போது' என்ற தலைப்பிலுள்ள பாடலையும், 'நில்லென்றார் யார்' என்ற பாடலும் இரு வேறு காதலிகளின் வேறுபட்ட மனநிலையைச் சுவையாக எடுத்துரைக்கின்றன. இதுபோன்றே ஒவ்வொரு பாடலும் இனிக்கின்றது. தமிழ் இலக்கியத்தில் ஆர்வமுள்ளோர் அனைவரும் விரும்பிப் படிக்கக் கூடிய நூல் இது.

—தமிழ்நாடு
26-7-1960

ஆன்றதமிழ் கண்டேன்;
அறிவின் திறமுணர்ந்தேன்;
ஊன்றுசுவைப் பாவின்
உரையறிந்தேன்;—தோன்றுபுகழ்
முத்துக் கணேச! நின்
மூவாத் தமிழ்த்தொகையாம்
புத்தகத்தை நான்படித்த
போது!

—புலவர் ராம. தெ. தெவராயன்
18—10—1959

From early days, Tamil poets have sung small, single poems depicting occasional emotions. Many of these have been collected as anthologies and many others are waiting for such collection. This work presents to the reader 80 of such small poems divided and arranged under the usual heads Aham and puram. Some of the poems are produced for the first time from inscriptions. Helpful introductory notes, explanations and suitable headings are given for each stanza and short accounts of the authors are appended. The publication is valuable to students of tamil literature as every one of the pieces in the collections has a special appeal and purpose and the language is exquisite

—HINDU
23-10-1960

## ஆசிரியரின் பிற நூல்கள்

**கவிதை**

| | |
|---|---|
| நல்லுரை வெண்பா | 1 00 |
| முத்துமாலை | 1 25 |

**கட்டுரை**

| | |
|---|---|
| தமிழர் வாழ்த்து | 2 00 |

**உரைநூல்**

| | |
|---|---|
| முத்தொள்ளாயிரம் (மூன்றும் பதிப்பு) | 2 00 |

குறிப்பு:- 'நல்லுரை வெண்பா' ஆங்கிலத்தில் RUBIES OF WISDOM என்று V.R.M CHETTIAR, B. A., அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

## ஆசிரியரின் பிற நூல்கள்

௵

**கவிதை**

| | |
|---|---|
| நல்லுரை வெண்பா | 1 00 |
| முத்துமாலை | 1 25 |

**கட்டுரை**

| | |
|---|---|
| தமிழர் வாழ்த்து | 2 00 |

**உரைநூல்**

| | |
|---|---|
| முத்தொள்ளாயிரம் (மூன்றாம் பதிப்பு) | 2 00 |

குறிப்பு:- 'நல்லுரை வெண்பா' ஆங்கிலத்தில் RUBIES OF WISDOM என்று V.R.M CHETTIAR, B. A., அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.